Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 6 பக்கம் விலை 45 காசு



**படிப்பு**

கட்டடத்திற்கு செங்கல் போல வாழ்க்கை முன்னேற்றத் திற்குப் படிப்புத் தேவை; திறமைதேவை, தேர்ச்சி தேவை.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**ஒழுக்கம்**

மனிதனிடம் சுலபத்தில் ஒழுக்கத்தைப் புகுத்த வேண்டுமானால் மாணவப் பருவத்தில் தான் முடியும்.

-தந்தை பெரியார்



மலர்: 6 சென்னை 22 - 6 - 82 செவ்வாய் வெளியூர் 23 - 6 - 82 புதன் இதழ்: 242

## ஜூலை 1 முதல் இலவச மதிய உணவுத் திட்டத்தை கண்காணிக்க

# புரட்சித்தலைவர் தலைமையில் குழு

### நன்கொடை தருவோருக்கு வருமான வரி விலக்கு

**சென்னை, ஜூன் 22- புரட்சித் தலைவரின் இலவச மதிய உணவுத் திட்டத்தை செயல்படுத்த குழு அமைக்கப்பட்டுள்ளது. நன்கொடை வழங்குவோருக்கு வருமான வரி விலக்கு அளிக்கப்படுகிறது.**

புரட்சித்தலைவர் அறிவித்துள்ள மதிய உணவு திட்டத்துக்கு பொது மக்கள் போட்டி போட்டுக் கொண்டு நன்கொடை அளிக்க முன்வந்துள்ளனர்.

நன்கொடை அளிப்போர் தமிழ்நாடு கிராமப்புற வளர்ச்சி இயக்குநருக்கு நிதியை அனுப்பி வைக்குமாறு அரசு கேட்டுக்கொண்டுள்ளது.

பொதுமக்கள் அளிக்கும் நன்கொடைக்கு வருமானவரி விலக்கு அளிக்கப்படும்.

பொது மக்கள் கொடுக்கும் நன்கொடையை பொதுவாக செலவழிக்கவோ, அல்லது குறிப்பிட்ட பகுதிக்குத்தான் செலவிட வேண்டும் என்றோ நன்கொடை தருவோர் அதிகாரிகளுக்கு தெரிவித்துக் கொள்ளலாம்.

சென்னை சுற்றுப்புறத்துக்கு 15கி. மீக்கு அப்பாற்பட்ட பகுதி திருச்சி கோவை, மதுரை ஆகிய நகராட்சிகளுக்கு 8கிலோ மீட்டருக்கு அப்பாலுள்ள பகுதிகளிலும் உள்ளவர்கள் முதல்வரின் சத்துணவு திட்ட நிதி என்ற முகவரிக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

### உயர்மட்ட குழு

இந்த திட்டத்தில் தனி அதிகாரியாக பணியாற்றுபவர் அந்த நிதியை பெற்றுக் கொள்ளுவார் என்று அரசு அறிவித்துள்ளது.

மதிய உணவு திட்டத்தை செயல்படுத்த தமிழக அரசு முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில்உயர்மட்டக் குழு ஒன்றை அமைத்துள்ளது. இந்த உயர் மட்டக்குழு மதிய உணவு திட்டம் செயல் படுவதை கண்காணித்து நிர்வகிக்கும்.

ஜூலை முதல் தேதியிலிருந்து இத்திட்டம் செயல்படுத்தப்படும்.

2 வயது முதல் 4 வயது வரை உள்ள குழந்தைகளுக்கு குழந்தைகள் நல இல்லங்களிலும் 5 முதல் 9 வயது வரை உள்ள குழந்தைகளுக்கு ஆங்காங்கே உள்ள பள்ளிகளிலும் மதிய உணவு வழங்கப்படும்.

இதற்கான நிலையங்களை சமூகநலத்துறை அமைக்க இருக்கிறது.

முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையிலுள்ள உயர்மட்டக் கமிட்டியில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர், கல்வி அமைச்சர் அரங்கநாயகம், சமூக நலத்துறை அமைச்சர் கோமதி சீனிவாசன் ஜி. சுவாமி நாதன் (எம். எல். சி.) திருமதி தாராசெரியன் எம் எல் சி ராஜம்மாள் தேவதாஸ், டாக்டர் அறம், ஷெரீப், சிவந்திஆதித்தன் ஆகியோரும் மற்றும் பல் வேறு துறைச் செயலாளர்களும் இந்த கமிட்டியில் இடம் பெற்றுள்ளனர்.

இதுதவிர அதிகாரிகள் அளவிலான கமிட்டியும் அமைக்கப்பட்டுள்ளது. நிதி, கல்வி, சமூக நலத்துறை, கிராம வளர்ச்சி மற்றும் சில துறை செயலாளர்கள் இடம் பெற்றுள்ளனர்.

## அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின்

# இளைஞர் அணி கண்டு நடுக்கம் ஏன்?

## கருணாநிதிக்கு புரட்சித்தலைவர் கேள்வி

**கடலூர், ஜூன் 22- அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் இளைஞர் அணி துவக்கப்போவதாக அறிவித்ததும் கருணாநிதியும், எம். பி. சுப்பிரமணியமும் பயப்படுவது ஏன் என்று 15 லட்சம் பேர் திரண்டிருந்த கடலூர் மாநாட்டில் முதல்வர் புரட்சித்தலைவர் கேள்விக்கணை விடுத்தார்.**

கடலூரில் நடந்த கழக மாநாட்டில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:—

கமிஷன் என்றால் என்ன? அந்த முடிவிற்கு என்ன தகுதி என்பதை மற்றவர்களிடம் எடுத்துச் சொல்லுங்கள். எப்படிப்பட்ட முடிவாக அவர் (பால்) பரிந்துரைத்திருக்கிறார் என்பதை சொல்லியாக வேண்டும்.

இதுதான் பால்கமிஷன் அறிக்கை. (அறிக்கையை மக்களிடம் காட்டினார்) இதையும் சொல்லுவார், எம்.ஜி.ஆர். ஏதோ எழுதி வைத்துக் கொண்டு படித்து விட்டார் என்று.

யார் கேட்டார்கள் கமிஷன் அமைக்க வேண்டுமென்று? திடீரென்று நானும் பண்ருட்டியாரும் அங்கே (திருச்செந்தூர்) சென்றோம், பார்த்தோம் நிலைமைகளைக் கண்டறிந்தோம். நிலைமைகளைப் பார்த்த பிறகு சென்னைக்கு வந்து கமிஷனை நியமித்தேன்.

### போராடாமல் கருணாநிதி கமிஷன் அமைத்ததுண்டா?

கருணாநிதி அவர்களே, நீங்கள் எப்போதாவது இது போன்ற நிலைமைகளில் ஒரு கமிஷனை— மற்றவர்கள் போராடாமல், மற்றவர்கள் ஜெயிலுக்குப் போக வேண்டிய நிலைமை ஏற்படுத்தப்படாமல் நியமித்ததுண்டா? அல்லது ஏற்படுத்தியதுண்டா?

இந்தக் கமிஷன் (பால்) ரிப்போர்ட்டை நாங்கள் 6 மாதத்திற்குள் சட்டசபையில் வைத்தாக வேண்டும். அடுத்த சட்டசபை 3 மாதத்திற்குள் வந்தாலும் வைத்தாக வேண்டும்.

அதைத் தமிழில் மொழி பெயர்க்க வேண்டும் என்ற கட்டாயத்தில் அதை அதிகாரிகளிடம் ஒப்படைக்கிறோம். அந்த அதிகாரிகளிடமிருந்து இவருக்குப் போய் சேருகிறது.

நான் கேட்கிறேன், இங்கே வியாபாரிகள் இருப்பீர்கள், குடும்ப ரகசியமிருக்கும். குடும்பப் பத்திரங்கள் இருக்கும். உறவினர்களுக்கு தெரிய முடியாத ஒன்று என்று இருக்குமானால் அது வெளியே கொண்டுவந்து சொன்னால் சும்மா விட்டுவிடுவோமா? இந்த உயிலை எப்படி வெளியே கொண்டு வந்தாய், சொன்னாய் என்று எவ்வளவு பெரிய வழக்கு, தகராறு குடும்ப சண்டைகளெல்லாம் ஏற்படும்?

ஆனால் ஒரு அரசு தன்னுடைய அதிகாரிகளுக்கு உத்தரவு போடுகிறது, 'இது மிக ரகசியமான அறிக்கை இது வெளியே யாருக்கும் தெரியக்கூடாது. ஆகவே உங்களிடம் ஒப்படைக்கின்றோம். ரகசியமாக தயாரித்து சட்டசபையில் வைப்பதற்குத் தாருங்கள்' என்று சொன்னால் அதை எடுத்துக்கொடுப்பவர் இருப்பாரானால் அந்த அதிகாரி மீது நடவடிக்கை எடுக்க வேண்டாமா?

இதைக் கூட செய்யாவிட்டால் எதற்கு பதவியில் இருக்கின்றோம்? எங்களுடைய கட்டளையை நிறைவேற்றாத அதிகாரிகள் மீது நடவடிக்கை கூட நாங்கள் எடுக்கவிட்டால் எந்தக் கட்டளை நிறைவேறும்? தன்னிறைவுத் திட்டம் நிறைவேற்றப்படுமா? குறைகள் இருந்தால் அதைத் தீர்ப்பதற்கு வழிவகை ஏற்படுமா? அதை யோசித்துப் பார்க்க வேண்டாமா?

இவைகளை எதற்காகச் சொல்கிறேன் என்றால் இந்த அரசே கமிஷனை அமைத்து, இந்த அரசே கமிஷனுடைய பரிந்துரையை ஏற்றுவிசாரிக்க உத்தரவிட்டிருக்கிறது, இந்தத் தீர்ப்பை சட்டசபையில் வைப்பதற்கு அச்சடிக்கக் கொடுத்தால் அதை ரகசியமாகப் பெற்றுக் கொண்ட கருணாநிதி சொல்லுகிறார், காப்பாற்றிக் கொள்ளத் திறமை இல்லை என்கிறார்.

### திருடனைப் பாராட்டுவதா?

திருடனைப் பாராட்டுவோமா? நம் வீட்டில் திருடிவிட்டுப் போனவனை அழைத்து நீ எப்படி எடுத்தாய் என்று கேட்டால், அவன் காப்பாற்றிக் கொள்ள உனக்குத் துணிவில்லை, என்னை ஏன் கேட்கிறாய் என்று கேட்டால் சும்மாவிடுவோமா? சட்டம் விட்டு விடுமா?

அவர் (கருணாநிதி) கேட்கிறார். என்மீது வழக்குப் போடுங்கள் என்று. சாட்சிகள் இருந்தால் போடுவோம், ஏன் தேவை ஏற்படும் பொழுது - சட்டம் அனுமதிக்கிற போது உங்களை சிறையிலே வைக்கவில்லையா? எனக்கென்ன ஆசையா அவரைச் சிறைச்சாலைக்கு அனுப்ப வேண்டும் என்று. அவ்வளவு முட்டாள்களல்ல நாங்கள்.

அவர் (கருணாநிதி) மிகமிக வருத்தப்படுகிறார். இலங்கையிலிருந்து வந்திருக்கிற தமிழ்ஈழ விடுதலைப் புலிகள் என்ற பெயரைத் தாங்கியிருப்பவர்களை நாங்கள் கைது செய்திருக்கிறோமாம்.

நீங்கள் (மக்கள்) சிந்தித்துப் பாருங்கள், ஒருவரை ஒருவர் கத்தியால் குத்திக் கொண்டால் வழக்குப் போட மாட்டோமா? அடித்துக் கொண்டால் வழக்குப்போட மாட்டோமா? அவர்கள் என்ன செய்தார்கள்? நடுவீதியிலே ஒருவரை ஒருவர் துப்பாக்கியால் சுட்டுக் கொண்டார்கள். அவர்களைக் கைது செய்யவேண்டாமா? யாராக இருந்தால் என்ன? சட்டம் எல்லோருக்கும் ஒன்று தான். எனக்கும் தான் உங்களுக்கும் தான்.

### யார் தவறு செய்தாலும் சட்டம் தொட்டாகவேண்டும்

யார் தவறு செய்தாலும் சட்டம் அவரைத் தொட்டாகவேண்டும். அவர்களைக் கைது செய்து எப்படி நடத்துகிறோம் என்பது இவருக்கு (கருணாநிதி) தெரியுமா?

மற்றவர்களையெல்லாம் போய் பிடிக்கிறார்களே என்று இவர் சொல்லுகிறார். நான் பணிவோடு சொல்லுகிறேன். எங்கிருந்து தகவல்கள் கிடைக்கின்றதோ—அவர்கள் கொடுத்த தகவலின் மீது போகிறார்கள். ஒருவரைக் கைது செய்கிறார்கள் அந்த வாலிபரைக் கைது செய்யும்போது அவரிடமும்



துப்பாக்கியும் தோட்டாக்களும் இருக்கின்றன.

எதற்காக அவர் வைத்திருக்கவேண்டும்? இங்கே என்ன போராட்டம்? ஈழத்திலே போராட்டம்— இங்கே துப்பாக்கிக்கு என்ன வேலை? இங்கே தோட்டாக்களுக்கு என்ன வேலை? சிந்தித்துப் பார்க்கவேண்டாமா? இந்த நாடு என்ன ஆகும்?

அவர்களுக்கு யார் மீதோ ஆத்திரம் வருகிறது.

(2-ம் பக்கம் பார்க்க)

## சென்னையிலிருந்து சென்ற

# விமானத்துக்கு விபத்து: சாவு 16 - பலர் காயம்

**சென்னை, ஜூன் 22- சென்னையிலிருந்து இன்று அதிகாலை பம்பாய்க்கு சென்ற விமானம், பம்பாயில் தரையில் இறங்கும் போது விபத்துக்கு ஆளாகி சிதறியது இதில் சென்னையைச் சேர்ந்த விமானப் பணிப் பெண் ஒருவர் உட்பட 16 பேர் இறந்தனர். பலர் படுகாயமடைந்தனர்.**

சிங்கப்பூரில் இருந்து சென்னை வழியாக சென்ற ஏர் இந்தியாவின் போயிங் 707 விமானம் "கவுரி சங்கர்" இன்று காலை பம்பாய் ஷார் விமான நிலையத்தில் தரை இறங்கும் போது விபத்துக்கு ஆளானது.

பம்பாயில் நேற்றிரவு பெருமழை பெய்ததோடு வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது.

சிங்கப்பூரிலிருந்து வழக்கம் போல் புறப்பட்ட விமானம் சென்னைவந்து பிறகு பம்பாய்க்கு கிளம்பிச் சென்றது.

### அதிகாலை

அதிகாலை 4-45 மணிக்கு விமானம் பம்பாயை அடைந்தது.

விமானத்தின் சக்கரங்கள் தரையை தொட்ட போது திடீரென மீண்டும் வேகம் பெற்று 3 ஆயிரம் மீட்டர் தள்ளி கீழே இறங்கியது.

பிறகு திடீரென கீழே இறங்கி, விமான ஓடு பாதையை ஒட்டி இருந்த சுவற்றில் மோதியது.

### மூன்றாக பிளந்தது

இவ்வாறு விமானம் மோதியதில்; விமானத்தின் தலைப்பகுதி, நடுப்பகுதி, வால்பகுதி, என மூன்றாக பிளந்தது.

விமானத்தின் தலைப் பகுதி மோதி சிதறியதில், விமானஎன்ஜின் தனியாக கழன்று விழுந்தது.

விமானத்தின் நடுப்பகுதி விமானத்தின் ஓடு பாதையை ஒட்டி மழையால் தண்ணீர் தேங்கிக் கிடந்த பகுதியில் விழுந்தது.

விமானத்தின் வால் பகுதி மிகுந்த சேதத்

(3-ம் பக்கம் பார்க்க)

# கடலூர் மாநாட்டில் புரட்சித்தலைவர் முழக்கம்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

எந்தத் தலைவர்கள் மீதோ கோபம் வருகிறது. எந்தத் தொண்டர்கள் மீதோ வெறுப்பு வருகிறது. அவர்கள் துப்பாக்கி எடுத்து சுட்டார்களானால்?... அவர்களுக்கு எதற்கு தமிழகத்தில் துப்பாக்கி-லைசென்ஸ் இல்லாமல்?

துப்பாக்கிகள் வைத்துக்கொள்ள லைசென்ஸ் கொடுக்கிறோம். அது இல்லாதவர்கள் மீது நடவடிக்கை எடுக்கின்றோம்.

இங்கே துப்பாக்கியால் சுட்டுக்கொண்டவர்களைக் கைது செய்து அவர்கள் வாக்குமூலத்தைப் பெற்று யார் யார் என்று தேடிக் கைது செய்தால் அவர் (கருணாநிதி) சொல்லுகிறார் தமிழ் ஈழப்புலிகளைக் கைது செய்கின்ற ராமச்சந்திரனோடு நான் எப்படி உறவு கொள்ளமுடியும் என்று.

## இளைஞர்களைத் தூண்டிவிடுபவரோடு எப்படிப்பேச முடியும்?

நான் கேட்கின்றேன் இளைஞர்களை தூண்டி விடுகின்ற உம்மோடு நான் எப்படிப் பேச முடியும்?

அண்ணா இதையா சொன்னார்? உயிரைக் கொடு என்று தான் சொன்னாரே தவிர உயிரை வாங்கு என்று எப்போதுமே சொன்னது கிடையாது. அதற்காகத்தான் எதையும் தாங்கும் இதயம் வேண்டும் என்று பேரறிஞர் அண்ணா சொன்னார். அதைத்தான் செய்துகொண்டிருக்கின்றோம்.

இங்கே எத்தனை கொலைகள்? பட்டியல் போட்டுப் படித்து காண்பித்திருப்பார்கள் என்று கருதுகிறேன். அத்தனை கொலைகள் கருணாநிதி ஆட்சியில் நடைபெற்றிருக்கின்றன. வழக்கு உண்டா? தீர்ப்பு உண்டா? குறிப்பிடுவதற்கு நிறைய இருக்கின்றன.

ஒருவரைக் கொன்றார்கள்—அதிலே நான்கு பேருக்கு ஆயுள் தண்டனை கொடுக்கப்பட்டது. அவர்கள் யார் என்று கேட்டால் தி. மு. க.வினர். வெளியே சொல்வார்களா?

நமது ஆட்களைக் கொன்றுவிட்டு நமது ஆட்கள் மீதே பழிபோடுகிற ஒரே ஒரு அரசியல் தலைவர் கருணாநிதியைத் தவிர, உலகத்திலேயே என்று கூட சொல்வேன்—வேறு யாரும் இருக்க முடியாது.

நம்மையே நமக்கு எதிரியாக்குகின்ற முறையில் தூண்டிவிட்டுப் பிரிவினையை உண்டாக்குவதற்கு வகை செய்கிறார்.

ஆனால் நாம் அப்படிச் செய்வதில்லை. அதைவிட மிக அதிகமான வேலை நம் தலையில் சுமத்தப்பட்டிருக்கிறது. மக்கள் நம்மை இரண்டாம் முறை எப்போது தேர்ந்தெடுத்தார்களோ அப்போதே இன்னமும் நமக்கு மிக அதிகமான சுமை ஏற்பட்டிருக்கிறதே தவிர, புகழ் அல்ல.

## புகழ் எப்போது வர வேண்டும்?

புகழ் எப்போது வரவேண்டும்? நாம் தேர்தல் நேரத்திலே என்ன வாக்குறுதி கொடுத்தோமோ அதை நிறைவேற்றிவிட்டு, 5 ஆண்டு கழித்து மக்களை சந்திக்கும்போது, 'நீ இவைகளையெல்லாம் சொன்னாய். இந்த அளவுக்கு செய்திருக்கிறாய். ஆகவே வாய்ப்பு இருந்தால் அதை செய்வதற்கு போ, அல்லது நீ சொன்னதை செய்து விட்டாய் இப்போது புதிதாக சொல்லுகிறாய் அதை செய்வதற்கு நீ போ' என்று சொல்லுகின்ற அளவில் மக்களை வைத்துவிட்டு நாம் மக்களை சந்திக்க வேண்டுமே தவிர, இவர்களைப் போல கொலைகாரர்கள், கொலை வெறியில் ஈடுபட இளைஞர்களைத் தூண்டி விடுகின்ற வேலை அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்திற்கு நிச்சயமாகக் கிடையாது; இதை அனுமதிக்காது என்பதை பகிரங்கமாக சொல்லிக் கொள்கிறேன்.

ஈழத்தமிழ் இளைஞர்கள் வசதியோடு இருக்கிறார்கள். கட்சியில் பேசினாலும் முதலமைச்சர் என்கிற முறையிலே சொல்கிறேன். அவர்கள் வசதியோடு இருக்கிறார்கள். பாதுகாப்பாக இருக்கிறார்கள். அவர்களின் உயிர்களுக்குத் தமிழக அரசு பாதுகாப்பு கொடுத்திருக்கிறது என்பதை மட்டும் சூசகமாகத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

ஒரு நபரைப் பிடித்து அவர் சொன்ன தகவலை வைத்து விழுப்புரத்திலே வந்து குண்டுகளைக் கண்டு பிடிக்கிறோம்.

நான் கேட்கிறேன்; கருணாநிதி அவர்களே தமிழகத்தில் குண்டுகளுக்கு என்ன வேலை?

தமிழ் ஈழ விடுதலைக்காகப் போராடுபவர்கள் அங்கே அவர்களது எண்ணம் எதுவோ, திட்டம் எதுவோ முடிவு எதுவோ அந்தநாட்டிலே அவர்கள் செய்து கொள்ளட்டும். நாம் அதிலே குறுக்கிடப் போவதில்லை. ஆனால் தமிழகத்திலே குண்டுகள் எதற்கு? தோட்டா, துப்பாக்கிகள் எதற்கு? இதை விசாரிக்கக் கூடாதா? இந்த விசாரணை நடைபெற்றுக்கொண்டிருக்கிறது.

கருணாநிதி சொல்லுகிறார் இந்த ராமச்சந்திரன், எங்கிருந்து வந்தவன், எப்போது வந்தவன், எப்படி வந்தவன் என்று கணக்கிட்டு பார்க்கிறார்.

## கருணாநிதிக்கு முன்பே தமிழ் கற்றவன்

நான் முன்பே சொல்லியிருக்கிறேன் நீ பிறக்காததற்கு முன்பே நான் தமிழ் படித்தவன். கருணாநிதி அ. ஆ எழுத ஆரம்பிக்கும்போது நான் தமிழில் எழுதப் படிக்க தெரிந்தவனாக இருந்திருக்கிறேன் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

என்னுடைய மூதாதையர்கள் கோவையைச் சேர்ந்தவர்கள் என்பதைச் சொல்லுவதிலே இன்றைய தினம் பெருமைப்படுகிறேன்.

ப. உ. ச. இங்கு மிகவும் வருத்தப்பட்டார். அவர் அப்படிச் சொல்லலாமா? என்னை (புரட்சித் தலைவரை) பயன்படுத்திக் கொள்ளவில்லையா? என்றார். யாரை அவர் பயன்படுத்திக் கொள்ளவில்லை? ப.உ.ச. அவர்களுக்கும் சொல்லுகிறேன், இனிமேல் நீங்கள் இதைப்பற்றிப் பேசுவதை விட்டுவிடுங்கள்.

அவருக்கிருக்கின்ற ஒரே ஆயுதம் அதுதான். தொடக்கத்திலும் அதைத்தான் சொல்லிக் கொண்டிருந்தார். இப்போது முடிவிலும் அதைத்தான் சொல்லிக் கொண்டிருக்கிறார். அதைத் தவிர ஆயுதத்திற்கு அவருக்கு வேறு வழியில்லை.

இவன் மலையாளி, அவன் தமிழன், இவன் முஸ்லிம், அவன் பிராமணன்-இந்த அளவுக்கு போய்க் கொண்டிருக்கிறார்.

ஒரு மனிதனுடைய அறிவு கோழி முட்டையிலிருக்கிற குஞ்சு போல. அந்த முட்டைக்குள் இருக்கிறபோது இதுதான் உலகம் என்று தெரிந்து கொள்ளுமாம். அதை நினைத்து மகிழ்ச்சி அடையுமாம். கொத்தி உடைத்து வெளியே வந்த பிறகு தாயின் இறக்கைக்குள் இருக்கும்போது எவ்வளவு பெரிய உலகமா என்று நினைத்துக் கொள்ளும். ஓட ஆரம்பிக்கும்போது தன் தாயுடன் குப்பைமேடுகளுக்கு போகும்போது அதுவல்ல உலகம் இது பெரியது என்று கருதுமாம்.

''கொக்கரக்கோ'' என்று கூவ குடிசை மேல் நின்று பார்க்கும் போது கண்ணுக்கு எட்டாத தூரம் வரை உலகம் இருக்கிறது இது வல்லவா உலகம் என்று நினைக்குமாம்.

அதைப்போலத்தான் கருணாநிதியும் விரவிப்பரவி இருந்த அண்ணாவுடைய கொள்கையை இன்று எங்கே கொண்டு வைத்திருக்கிறார் என்றால் கோழி முட்டைக்குள் இருக்கிற குஞ்சுக்கு எந்த உலக அனுபவம் இருக்குமோ அந்த அளவு இருந்தால் போதும் தன் தொண்டர்களுக்குத் தன்னை நம்புவர்களுக்கு என்று அவர் கருதிவிட்டார்.

அவரைப் போய் திருத்தப் போகிறீர்களா? அவரைத் திருத்த முடியுமா? கோழி முட்டைக்குள் இருந்து வெளியே வர குஞ்சுக்கு உலகம் தெரியும். வெளியேயிருந்து உள்ளே போயிருக்கிறது — இயற்கைக்கு மாறாக—செயற்கைத் தன்மை உடையதாக மாறிவிட்டது. அவர் சொல்வதைப்பற்றி கவலைப் படாதீர்கள்.

என்னைப்பற்றி, யார் எந்த ஜாதியை வேண்டுமானாலும் சொல்லட்டும். நான் இங்கு சவால் விடுகிறேன். என்னை என்ன ஜாதி என்று சொல்லுங்கள் பார்ப்போம், எந்த மதம் என்று சொல்லுங்கள்! இந்து மதம் என்று சொல்வீர்களா?

## நடிக்க வந்து தோற்ற கருணாநிதி

மறைமலை அடிகள் எழுதிய அந்த தமிழர் மதத்தைச் சேர்ந்தவன் எம். ஜி. ராமச்சந்திரன் என்றுதான் சொல்லுவேன்.

யாரோ இவருக்கு ஒரு பூணூல் போட்ட பிராமணர் மாலை போட்டார் என்றார். அவர் பிராமணரா என்பது எனக்கு ஒரு சந்தேகம். இவரே கூட ஒரு ஆளை அனுப்பி பூணூல் போட்டு வந்து எனக்கு மாலை போடு நான் பேசுகிறேன் என்று சொல்லி இருப்பார்.

பணம் பத்தும் செய்யும். செத்த பையனையே என்மகன் இல்லை என்று சொல்ல வைத்தவரல்லவா கருணாநிதி? அதைவிட ஒருவரை பிராமணராக வேடம் போட்டு வரச்சொல்ல எவ்வளவு நேரமாகும்?

நடிகர் நடிகர் என்கிறார். இவர் எம். ஆர். ராதா அண்ணன் கம்பெனியில் முதலில் நடிகராகப் போய் நடித்து வெற்றிபெற முடியாமல் பின்பு வந்து விட்டவர். வெற்றி கிடைத்திருந்தால் இவர் அதையே பின்பற்றியிருப்பார். அதன் பிறகு அண்ணாவை, மற்றவர்களை காப்பியடித்து எழுத ஆரம்பித்து தமிழிலே நல்ல தேர்ச்சி பெற்றிருக்கிறார். நான் மறுக்கவில்லை. நல்ல தமிழில் எழுதுகிறார். பெரிய புகழ் கிடைத்திருக்கிறது அதைக் காப்பாற்றிக் கொள்ளக் கூடாதா?

நீங்கள் தெலுங்கர் என்று நாங்கள் சொல்லுவதற்கு வழி வைக்கவேண்டுமா? தெலுங்கு நாட்டிலே இருந்து வந்த உங்களுடைய மூதாதையர்களுடைய சந்ததி நீங்கள் என்று நாங்கள் சொல்ல வழிவைக்கலாமா? எவ்வளவு கேவலம்? நாங்கள் உங்களை எவ்வளவு பாராட்டியிருக்கின்றோம்! புகழ்ந்திருக்கின்றோம்! எங்களையே இவ்வளவெல்லாம சொல்லி, காங்கிரஸ்காரர்களுக்கெல்லாம் உங்கள் நிலைமையை விளக்கிக் காட்டுவதற்கு எங்களைப் பயன்படுத்தலாமா? அந்த இடத்திற்குக் கொண்டு போகாதீர்கள்.

மன்றாடியார் இனத்தைச் சேர்ந்த எம். ஜி. ராமச்சந்திரன், உங்களைவிட இந்த தமிழகத்திற்கு அதிகம் சொந்தம் உள்ளவன் என்பதைத் தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

## இளைஞர் அணி கண்டு தி.மு.க., காங்கிரஸ் மிரள்வது ஏன்?

இளைஞர் அணி என்று சொன்னவுடனே கருணாநிதி கேட்கிறார், கொள்கையை நாங்கள் விட்டுவிட்டோம் என்று. எங்கள் கொள்கையை அவர் எப்போது ஏற்றுக்கொண்டார்? அப்படியானால் அண்ணாயிசத்தை ஏற்றுக்கொண்டு இந்த கட்சியிலல்லவா அவர் வந்திருக்க வேண்டும்? நாங்கள் கொள்கையை விட்டுவிட்டோமாம். இந்த அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம், அண்ணா தி. மு. கழகமாக தோற்றுவிக்கப்பட்டபோது 18 செயலாளர்கள் நியமிக்கப்பட்டனர். அதில் ஒரு செயலாளருக்கு என்ன பணி தெரியுமா? இளைஞர் அணி செயலாளர் — முசிறிபுத்தன்.

இப்போது இளைஞர் அணி என்று சொன்னால் — ஆகா கொள்கையை விட்டுவிட்டார் என்கிறார். இவர்தான் இப்படிப் பேசுகிறார் என்றால் எம். பி. சுப்பிரமணியத்திற்கு என்ன வந்தது என்று எனக்கு தெரியவில்லை. அவரும் கேட்கிறார் இளைஞர் அணி எதற்கு என்று.

ஏன் நாங்கள் இளைஞர் அணி என்று சொன்னால் நீங்கள் இப்படி பயப்படுகிறீர்கள்? இளைஞர்கள் எங்களிடம் நிறைய இருக்கிறார்கள். அவர்களை ஒன்றுபடுத்திவிட்டோம் என்றால், அவர்கள் ஆங்காங்கே பணியாற்றும் அமைப்புகளை உருவாக்கி விட்டால் இந்த நாட்டைத் தமிழகத்தை தங்களால் எதுவுமே செய்யமுடியாது என்று அச்சப்படுகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும். இல்லையானால் இவ்வளவு அக்கறையும் கவலையும் அவர்கள் படவேண்டியதில்லை.

## கழகக் கிளை இல்லாத ஊரே இல்லை என்ற நிலையை உருவாக்குக

இளைஞர் அணி தொடங்கப்படுவதுமட்டுமல்ல, இன்றைய தினம் இந்த மாநாட்டில் சொல்லுகிறேன். இன்னும் 2 ஆண்டுகளில் கிளைக்கழகம் இல்லாத ஊரே தமிழகத்தில் இருக்கக்கூடாது. அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக கிளைக் கழகங்கள் சொந்தக் கட்டிடங்களிலே இருந்தாகவேண்டும், இந்தப் பணியை நாம் மேற்கொண்டாகவேண்டும். இது நம்முன் உள்ள மகத்தான பிரச்சினையாகும். இங்கு பண்ருட்டியார் தலைமை வகிக்கிறார், இந்த மாநாட்டில் இதைச் சொல்லும் வாய்ப்பு கிடைத்ததற்கு சந்தோஷப்படுகிறேன்.

சங்கீத வித்துவான்களைத் தான் செம்மங்குடி அரியக்குடி என்றெல்லாம் சொல்லுவார்கள். இப்படித் தலைவர்களை பண்ருட்டி, விழுப்புரம், திண்டிவனம் என்றெல்லாம் சொல்லுவதில்லை. ஒரே ஒரு நபர் பண்ருட்டியார் தான். அவர் பெயர் ராமச்சந்திரன் தான்—குட்டி ராமச்சந்திரன் என்று வைத்திருக்கிறார்கள். ஆனாலும்அவர் பண்ருட்டியார்.

கிளைக் கழகங்கள் சொந்தக் கட்டிடங்களில் இருந்தாகவேண்டும். அந்தப் பணியைத் தொடங்கினால்தான் நம்முடைய திட்டங்களை — அரசு தீட்டுகிற திட்டங்களை ஒழுங்காக நடத்திக் காட்ட முடியும். தவறு செய்கின்றவர்களை மக்கள் முன் நிறுத்த முடியும். எந்த அதிகாரியாவது அவரது காரியத்தை செய்யாமலிருந்தால்...இளைஞர்கள் சாதாரணமானவர்கள் அல்ல......

ஒன்றை மனதில் வைத்துக் கொள்ளுங்கள்; 20, 25 வயது வாலிபரை அடிக்கலாம். சண்டை போடலாம். அடிவாங்கிக் கொள்ளலாம். 12, 13 வயது இளைஞர்களை நீங்கள் என்ன செய்வீர்கள்?

என்னுடைய வாழ்க்கையில் நடந்த சம்பவம் ஒன்று. சாரங்கபாணி கோவில் என்று

கும்பகோணத்திலிருக்கிறது. அங்கு வவ்வால்கள் அதிகம். ஒரு பெரிய பயில்வானுடைய தம்பி. அவர் முரடர். நான் குறுக்கு வழியில் கொட்டகைக்கு செல்வதற்காக கோவிலுக்குள் நுழைந்து அடுத்த தெருவுக்குப் போக முயன்றேன். பகல் நேரம், 10, 11, 12 வயது பையன்கள் எல்லாம் வாண்டுகள் சுற்றி நின்று கொண்டு அவரை அடிக்கிறார்கள், இடிக்கிறார்கள், கேலி செய்கிறார்கள். ஏன் தெரியுமா? பையன்கள் பிடித்த வவ்வால்களை எல்லாம் இவர் பறித்து பறக்க விட்டுவிட்டார். திருப்பி அடிக்கவும் முடியவில்லை. அடித்தால் தாங்க மாட்டார்கள். திட்டுவதற்கு வழியில்லை. தன் வீட்டிலும் பிள்ளைகள் இருக்கின்றன.

## வளமான எதிர்காலமே இளைஞர் அணி நோக்கம்

அப்படிப்பட்ட குழந்தைகள் வளர்வதற்கு முன்பு பண்பும், அடக்கமும், கண்ணியமும், அண்ணா சொன்னார்களே அந்த கட்டுப்பாடும் சொல்லிக் கொடுத்து இளைஞர் அணியை வளர்த்தோமென்றால் எதிர்காலம் எவ்வளவு உன்னதமாக இருக்கும் என்பதை கற்பனை செய்துதான் 72ம் ஆண்டு நான் பொதுச்செயலாளராக தேர்ந்தெடுக்கப்பட்டபோது அந்த அறிவிப்பை சொன்னேன். அது நிறைவேற முடியாத நிலை. அன்று கருணாநிதி அவர்களுடைய அடக்குமுறை, தோழர்கள் பட்ட அவஸ்தை, உயிரைப் பறிகொடுத்த சூழ்நிலை. இத்தகைய நிலைகளில் நாம் நினைத்ததை நடத்த முடியாமல் போய் விட்டது.

நினைத்ததை முடிப்பவன் எம்.ஜி.ஆர். என்று நீங்கள் புகழ்ந்தால் மட்டும் போதாது. அதை நடத்திக் காட்ட வேண்டியது நீங்கள் (மக்கள்) என்பதை தயவு செய்து மறந்து விடாதீர்கள். நீங்கள் இல்லையென்றால் நான் இல்லை. அதை மறந்து விடக்கூடாது.

## என்றென்றும் அண்ணாவின் அரசு

ப.உ.ச. சொன்னார். எம்.ஜி.ஆர். இருக்கும் வரையில் இதே ஆட்சி தான் இருக்கும் என்று சொன்னார். மன்னிக்க வேண்டும். எம்.ஜி.ஆர். எத்தனை வருஷத்திற்கு இருப்பார் என்று யாராலும் சொல்ல முடியாது. எம். ஜி. ஆர். மறைந்து ஆயிரம் ஆண்டுகள் ஆனாலும் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் தான் தமிழகத்தில் ஆட்சியில் இருக்கும் என்பதை நாம் வளர்க்கின்ற இந்தக்கழகம் உறுதிப் படுத்தியாக வேண்டும்.

(பலத்த கைதட்டல்)

அப்போது தான் நாம் அண்ணாவுக்கு செய்த தொண்டே தவிர இல்லாவிட்டால் ராமச்சந்திரன் தனக்காக இந்தக் கட்சியை ஆரம்பித்தான் என்பது தான் முடிவாகும். அது இருக்கக் கூடாது.

இப்போதே நமக்கு அடுத்த தலைமுறை என்ன? யார், எப்படிப்பட்டவர் தயாரிக்கப்பட வேண்டும். லியாகத்அலிகான் பேச்சைக் கேட்டீர்கள் அல்லவா? பொருளாதாரத்தைப் பற்றி அவர் எடுத்து வைத்த புத்தகங்களின் பெயர்களைக் கேட்டீர்கள் அல்லவா! இதற்கு யாராவது பதில் சொல்ல கருணாநிதியிடம் இருக்கிறார்களா?

மனோகரன் ஏதோ என்னிடம் நேரில் பேச வேண்டுமென்று பேசியதாக சொன்னார்கள். அவருக்கு என்னிடம் பேச வேண்டும் என்ற ஆசை இருக்கிறது. நெருங்கிப் பழகியவர் அல்லவா? பொதுக்கூட்டத்திலாவது பேசுவோமே என்று வருகிறாரே தவிர போட்டி வரவேண்டும் என்பதல்ல.

கருணாநிதிக்கு அவரே பதில் சொல்லி இருக்கிறார். கருணாநிதி எப்படிப்பட்டவர் என்பதை; அதை நீங்கள் கேட்டால், மனோகரன் பேச வரும் போதெல்லாம் கருணாநிதியைப் பற்றி என்னென்ன சொல்லியிருக்கிறார் என்பதில் ஒன்றிரண்டை சொல்லப்போகிறேன்.

அவர் மீது யாரும் கோபித்துக் கொள்ளக் கூடாது, அவர் செல்லப்பிள்ளை. எப்போதும் வசதியாக இருக்க வேண்டும். உடல் அலுங்காமல் சட்டையில் அழுக்குப்படாமல், வியர்வை வராமல் அப்படியே வந்து அப்படியே போகவேண்டும்.

அவர் இங்கே இருக்கும்போது என்ன பேசினாரோ, அதை அங்கே போய்ப் பேசுகிறார். காங்கிரசுக்குப் போனால் அதைப் போல் இவர்களைப் பற்றி பேசுவார். திரும்ப இங்கே வந்தால். நான் அன்றே சொன்னேன், இடையிலே கொஞ்சம் தவறு செய்து விட்டேன் என்று சொல்லுவார்.

## கருணாநிதி பற்றி மனோகரன்

செய்யூர் கூட்டத்தில் மனோகரன் பேசியிருக்கிறார். 1975ம் ஆண்டு பத்தாவது மாதம் 24ந்தேதி.

''கன்னியாகுமரி மாவட்டத்தில் ஒரு ஸ்டேடியம் கட்டப்பட்டது. அதற்கு செலவான தொகை ரூ. 10 லட்சம். புரட்சித்தலைவர் மூலம் வசூலான தொகை 6 லட்சம் ரூபாய்''.

இதைத்தான் ஜெயலலிதா சொன்னார். ஜெயலலிதா நாட்டியத்தை நடத்தி நான் தலைமை வகித்து வசூலான தொகை 6 லட்சம் ரூபாய். அந்த 6 லட்சத்தையும் அங்கு வசூலான மற்ற தொகையையும் சேர்த்து 10 லட்சத்தில் ஸ்டேடியம் கட்டினார்கள்.

மனோகரன் பேச்சு ''அந்த ஸ்டேடியத்திற்கு அடிக்கல் நாட்டப்பட்டபோது புரட்சித்தலைவர் பெயர் இருந்தது. ஸ்டேடியம் உருவாகி வந்தது. ஸ்டேடியம் கட்டி முடிக்கப்பட்டது, கருணாநிதி திறந்து வைக்க சென்றார். அங்கே புரட்சித் தலைவர் பெயர் இருந்ததை நீக்கச் சொன்னார். திறப்பு விழா நடந்தது. மாவட்ட ஆட்சித் தலைவர் வரவேற்புரையாற்றினார். வரவேற்புரை அச்சடிக்கப்பட்டிருந்தது, அதில் இந்த ஸ்டேடியம் கட்டி முடிக்கப் பட்டதற்காக முதன் முதலாக எம். ஜி. ஆருக்குத் தான் நன்றி சொல்ல வேண்டும் என்றிருந்தது. அது கருணாநிதி கண்களில் பட்டிருக்கிறது. உடனே அந்த வரிகளை நீக்கச் சொல்லி உத்தரவு போட்டார். பிரசுரங்கள் கட்டோடு எடுத்துச் செல்லப்பட்டன. இதுதான் கருணாநிதி'' என்று மனோகரன் கருணாநிதியைப் பற்றி சொல்லி இருக்கிறார். அங்கே போய் இதற்கு என்ன பதில் சொல்லப் போகிறார் என்று எனக்குத் தெரியாது.

நான் ஆட்சிக்கு வந்தவுடனே முதலில் போட்ட உத்தரவு என்ன தெரியுமா? உயிரோடு இருக்கிறவர்களுக்கு சிலை வைக்கக்கூடாது.

ஏன் எம். ஜி. ஆருக்கு சிலை வைக்க ஆட்கள் இல்லையா? கிளைக் கழகங்கள் இல்லையா? தோழர்கள் இல்லையா, தொண்டர்கள் இல்லையா? தலைவர்கள் இல்லையா? மக்கள் இல்லையா? மன்றங்கள் இல்லையா? யார் இல்லை? எங்கு வேண்டுமென்றாலும் எம்.ஜி.ஆர். சிலை வைக்கமுடியும். அப்படி வரக்கூடாது என்பதற்காகத் தான். என் சிலை முதலில் வராமலிருக்கவேண்டும். உயிரோடு இருக்கிற வரையில் என்பதற்காகத் தான் அந்த உத்தரவை நான் கையெழுத்திட்டுப் போட்டேன்.

ஒரே ஒருவருக்கு மட்டும் சிலை எழுப்பி விட்டார்கள். நானே திறந்து வைத்தேன். சிலம்பு செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்கள் சிலை. இதைத் தவிர வேறு எந்த நபர்களுக்கும் உயிரோடு இருப்பவர்களுக்கு சிலை வைக்க அனுமதிக்கவில்லை. இவ்வளவு கட்டுப்பாடோடு இருக்கிறோம். அந்த கருணாநிதி நம்மைப் பார்த்து எதையும் சொல்லுகிறார் என்றால் தாங்கிக்கொள்ள முடியுமா?

இந்திரா காந்தி அவர்கள் தமிழகத்திற்கு வந்த போது பதவி இழந்த பிறகு நான் சென்று விமானக் கூடத்திலே மாலையிட்டு வரவேற்று அவருக்கு தக்க பாதுகாப்பு கொடுக்க வேண்டும் என்று சொல்லி குடந்தைக்கு ஆசிரியர் மாநாட்டிற்கு நான் சென்றேன்.

ஆனால் இன்றைக்கு மக்கள் மறந்திருப்பார்கள் என்று சொல்கிறார்.

அவருடைய பத்திரிகையில் (முரசொலி) வந்த கட்டுரை இது—

## ஊழல்மகாராணி என்று இந்திராவை சொன்னது கருணாநிதி தானே...

''ஊழல் மகாராணி ஊர்வலம் வருகிறாள்''

இந்திரா காந்தி அம்மையாரே என்னைப் பாராட்டுகிறார் என்று சொல்லுகிறாரே அவருக்கு இவர் கொடுத்த பட்டம் 'ஊழல் மகாராணி'.

''கழகத்தவரே தன்மானத் தமிழனே கறுப்புக் கொடியுடன் வா, வா, வா!

பேச்சுரிமையைத் தடுத்தவர் பேச வருகிறார். தன் கட்சியைத் தவிர வேறு கட்சி கூட்டம் நடத்தக்கூடாது என்று வாய்ப்பூட்டு போட்டவர் இன்று கூட்டம் பேச வருகிறார்.

அரசாங்க செலவில் ஓசி ரயிலில் கூட்டத்திற்கு ஆட்களை வரவழைத்தவர் இன்று தானே ரயிலில் வருகிறார்.''

எங்கெங்கே எப்படிச் செல்லுகிறார் என்பதை சொல்கிறார்கள் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

''மக்கள் உயிர் வாழும் உரிமையை பறித்த ஊழல் மகாராணி இன்று ஊர்வலம் வருகிறார். ஏன் இன்னும் தமிழ்நாட்டில் தனக்கு மக்கள் ஆதரவு இருக்கிறது என்பதை காட்டுவதற்கு; தன்மானத் தமிழனே இன்னும் உனக்கு சொரணை வரவில்லையா?''

இந்திராகாந்தி வர்றாங்க. உனக்கு சொரணை இல்லையா? என்ன அர்த்தம்? வரவிடாதே என்கிறார். அதுமட்டுமல்ல.

''ஏதோ நெருக்கடி காலத்தில் கட்டுப் பட்டிருந்தோம். படமுடியாதினி துயரம், பட்டதெல்லாம் போதும் என்பதைக் காட்ட சிங்கத் தமிழா கரை உடைந்த காட்டாற்று வெள்ளம் போல் புறப்படு, கையில் கறுப்புக் கொடியுடன் வா. பொறுத்தது போதும் பொங்கி எழு. அநியாயமாக ஆட்சியைக் கலைத்து அட்டகாசம் செய்தால் இனி தமிழ்நாட்டுப் பக்கம் தலை வைத்து படுக்க முடியாது என்கிற உணர்வை ஊழல் மகாராணி பெறும் விதத்தில் அண்ணாவின் அறவழியில் கறுப்புக் கொடி நிகழ்ச்சி அமையட்டும். தமிழ்நாடு ஒரு தீவு என்றார், ஆம் தீவுதான். சர்வாதிகாரத்தை துச்சமென மதிக்கும் ஜனநாயக மரபு வாழும் தீவுதான் தமிழகம் என்று அவர் உணரட்டும்'' என்பதை சொல்லிக் காண்பிக்கிறார் என்ன பொருள்.

நான் ஆவடிக்கூட்டத்திற்கு போனேன். யார் யார் போனோம் தெரியுமா? இந்திய கம்யூனிஸ்டு தலைவர் கல்யாணசுந்தரம். நாஞ்சில் மனோகரன் நான் இன்னும் நண்பர்கள் அங்கே போனோம்.

நான் எப்போதும் கூட்டத்திற்கு வேனில் போவது பழக்கம்; நான் போன வேன் பாதியில் கெட்டுவிட்டது. இயற்கை அப்படிச் செய்துவிட்டது. நாங்கள் வேறொரு காரில் சென்றோம். கார் போய்விட்டது.

இரண்டு பக்கத்திலும் இரும்பு தடிகளோடு குழாய்களோடு, தடிகளோடு கொடி என்ற பெயரால் சொருகி வைத்துக் கொண்டு காத்திருக்கிறார்கள். அது எங்களுக்குத் தெரியாது.

நாங்கள் போனோம். என் வண்டி முன்னால் போய்விட்டது. போய்விட்ட பிறகு தான் எம். ஜி. ஆர். வண்டி போய்விட்டது என்று அவர்களுக்குத் தெரிகிறது. உடனே அடித்தார்கள். லாரியிலே வந்த 13 பேர்களை குற்றுயிரும்

(3-ம் பக்கம் பார்க்க)

# புரட்சித்தலைவர் முழக்கம்... (2-ம்பக்கத் தொடர்ச்சி)

குலை உயிருமாக அடித்து ரத்த வெள்ளத்தில் மிதக்கச் செய்தார்கள். அவர்களை மேடையிலே கொண்டு வந்தார்கள். இதற்கும் சொன்னார் கறுப்புக்கொடி காட்டப்போகிறோம் என்று.

## கறுப்புக்கொடி போர்வையில் கருணாநிதியின் சதிவேலை

எப்போதும் அவர் ஒரு பழக்கம் வைத்திருக்கிறார். எதிர்க்கட்சித் தலைவரை ஒழிப்பதற்கு கறுப்புக்கொடி காட்டுவது.

இந்திரா காங்கிரஸ் நண்பர்கள் — ஜெயப்பிரகாஷ்நாராயண் வந்தபோது அந்தக்கட்சியின் பெண்களும் ஆண்களும் அங்கே கறுப்புகொடி காட்டினார்கள் என்பதற்காக அடிக்கப்பட்டு மண்டைகள் பிளக்கப்பட்டு தன்மானமுள்ளவன் வெளியே பேச முடியாத வார்த்தைகளெல்லாம் பேசினார்கள்.

"அதை கண்டிப்பதற்காக (இந்திரா காங்கிரசுக்காக) நாம் பொறுப் பேற்றுக் கொண்டோம். செங்கற்பட்டிலே கறுப்புக் கொடி காட்டுவோம் என்று அறிவித்தோம.

எஸ். எம். துரைராஜிடம் சொன்னேன். கறுப்புக் கொடி இருக்க வேண்டும். அதில் குச்சி இருக்கக் கூடாது. கறுப்புக்கொடியை கையிலே ஆட்டிக் காண்பிக்க வேண்டும் என்றேன்.

## கழகம்—தி.மு.க. வேறுபாடு

கருணாநிதி என்ன சொல்கிறார், தடியோடும் கொடியோடும் வா என்கிறார். இதுதான் அவருடைய கழகத்திற்கும் அண்ணாவினுடைய கழகத்திற்கும் உள்ள வேறுபாடு என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

தண்ணிறைவுத் திட்டம் நிறைவேற்றப்பட்டு வருகிறது; அது இந்த ஆண்டு முடிந்து விடும். அடுத்த ஆண்டு அதில் உள்ள குறைகள் தீர்த்து வைக்கப்படும்.

## வேலையில்லா திண்டாட்டம் போக்க திட்டம்

அடுத்தது மிகப் பெரிய பொறுப்பு "வேலையில்லாத் திண்டாட்டத்தை நீக்குவது" அந்த மிகப் பெரிய வேலையை அடுத்த ஆண்டு எடுத்துக் கொள்ள இருக்கிறோம்.

அதற்குள் நாம் கட்டுப்பாட்டோடு எங்கெங்கே யார் யாருக்கு எத்தகைய தொழில் செய்ய முடியுமோ வேலை தெரியுமோ அதைப் புள்ளி விவரங்கள் எடுத்து வைத்து தலைமை அமைப்புகளை நடத்துகிற பொறுப்பாளர்கள் மூலமாக தலைமைக் கழகத்திற்கும் வரவேண்டும் அரசுக்கும் வரவேண்டும்.

இந்தப் பணியை படித்த இளைஞர்கள், படித்த பெரியவர்கள், படித்த தாய்மார்கள் பொறுப் பேற்று செய்தாக வேண்டும். அப்போது தான் நாம் மக்களுக்கு கொடுத்த வாக்கை காப்பாற்ற முடியும்.

நேற்றைய தினம் அண்ணா வாழ்க, புரட்சித் தலைவர் வாழ்க, எம். ஜி. ஆர். வாழ்க, டாக்டர் நாவலர் வாழ்க என்றாகர்ள். நாங்கள் வாழ வேண்டுமென்றால் தமிழக மக்கள் வாழ்ந்தாக வேண்டும்.

ஏதோ பதவியில் இருப்பதால் மட்டும் நாங்கள் வாழ்ந்ததால் பொருளில்லை. நான் சினிமா துறையில் இருந்தபோது நான் செய்த சொந்த உதவிகளை இப்போது செய்ய முடியவில்லை, அந்த அளவில் தான் நான் இருக்கிறேன்.

கருணாநிதி போன்றவர்கள் மீது லஞ்சக் குற்றத்தைச் சொன்னோம், வெளியேற்றப்பட்டார்கள் வழக்கு நடந்தது.

அதுபோல் நம்மீது வழக்குப் போடட்டும். வெளியேற்றட்டும் என்று ஒவ்வொன்றாகச் சொல்லிப் பார்க்கின்றார்.

தேர்தலின் போது பல்கேரியா கப்பல் என்று சொல்லி ஊரெல்லாம் கப்பல் கட்டிவிட்டார். அதில் கதையையும் கட்டிவிட்டார். நான் ஒரு கோடிக்கு மேல் லஞ்சம் வாங்கி விட்டதாக—அட்வான்ஸ்—எந்த முட்டாள் அப்படி ஒரு அரசை வைத்துக் கொண்டிருப்பதாகவும் எனக்குத் தெரியவில்லை.

பல்கேரியா நாடு ஒரு கம்யூனிஸ்டு நாடு. கம்யூனிஸ்டு நாடு லஞ்சம் கொடுத்து தன்னுடைய கப்பல்களை விற்பதற்கு பேரம் பேசும் என்று இவர் சொல்லுகிறார்.

## குற்றச்சாட்டு கூறக்கூற நமக்கு வாக்குகளும் கூடுகிறது

அந்தப் பொறுப்பை — வியாபாரத்தை நடத்த கையெழுத்துப் போடுகிற அதிகாரி டெல்லியிலே சொன்னார், எந்த பிரச்னையும் கிடையாது. யாரையும் நாங்கள் பார்க்கவில்லை. அதிகாரிகளோடு பேசிக்கொண்டிருக்கிறோம் என்றார். அதை பத்திரிகைகள் வெளியிட்டாலும்கூட எல்லோரும் பத்திரிகைகளை படிக்க முடியாது.

கருணாநிதி திரும்பத் திரும்ப சொன்னார். ஆனால் இப்போது நடந்த தேர்தலில் முன்பைவிட 20 லட்சம் வாக்குகள் அதிகமாக தந்து நம்மை மீண்டும் மக்கள் ஆட்சிக்கு அனுப்பிவைத்தார்கள் என்றால் நம்மீது வைத்திருக்கிற நம்பிக்கை.

இன்று சொல்கிறார், ஜெர்மன் கப்பல் 3 கோடி என்கிறார். ஜெர்மன் கம்பெனியோடு பேச்சே இல்லை. கொரியா கப்பல் என்றார். யாரோ ஒருவரை நான் அங்கே அனுப்பி வைத்திருக்கிறேன் என்றார்.

நான் சொல்லுகிறேன், கொரியாவுடன் எந்த விதமான பேச்சே இடையாது. நான் யாரையோ அனுப்பி வைத்திருக்கிறேன் என்கிறார்.

இன்னும் சொல்லப்போனால் எந்தக் கப்பல் வாங்கலாம் என்று சொல்லுகின்ற குழுவில் மத்திய அரசின் டெக்னீஷியன்கள் 2 பேர் இருக்கிறார்கள். அவர்களும் கூடி முடிவெடுத்தால்தான்—கையெழுத்திட்டால்தான்— மத்திய அரசு ஒப்புக் கொண்டால்தான் கப்பல்களை வாங்க முடியும். அதற்கு முன்பு வாங்க முடியாது. இதற்குள் நான் பேரம்பேச ஆள் அனுப்பினேன் என்று கருணாநிதி சொல்கிறார் என்றால் அவர் எங்கே சென்று கொண்டிருக்கிறார் என்று பாருங்கள்.

வி. கிருஷ்ணமூர்த்தி என்பவரை உங்களுக்குத் தெரியும். கருணாநிதி ஆட்சியிலே இருக்கும்போதே சட்டசபையிலே பேசினார், 'எங்கு பார்த்தாலும் விளக்கு போட்டுவிட்டேன் என்று சொல்லுகிறீர்களே. ஆனால் எங்கு பார்த்தாலும் விளக்கே இல்லையே' என்று கருணாநிதியைப் பார்த்து கேட்டார். அவர் மீது நடவடிக்கை எடுக்கலாமா என்று தான் எண்ணினாரே தவிர புகாருக்காக எந்தவித முயற்சியும் எடுக்கவில்லை.

பூம்புகார் கார்ப்பரேஷன் என்று வைத்து முன்பு 2 கப்பல்கள் வாங்கினார்கள் அதை ஜப்பானிலே போய் ஏற்றுக்கொள்ளுகின்ற பணியை பண்ருட்டியார் செய்தார். இப்போது அதற்கு என்ன விலைஎன்று யாராவது கேட்டால் பண்ருட்டியார் தான் அதைச் செய்தார். அவரைப் போய்க் கேளுங்கள் என்கிறார்.

## கப்பல் கார்ப்பரேஷன் இயக்குநர் மாற்றிய 32லட்சம் எப்படிவந்தது?

உண்மை என்ன? இங்கே சொன்னார்களே 32 லட்சம் ரூபாய்களை ஒரே நாளில் சில்லறையாக மாற்றினார் என்று, ப. உ. சண்முகம் சொன்னார். நான் குறிப்பிட்டுச் சொல்கிறேன் அதை மாற்றியவர் ஐ.ஏ.எஸ் அதிகாரி நாகராஜன் என்பவர்.

இந்த பூம்புகார் ஷிப்பிங் கார்ப்பரேஷனுக்கு அவர் இயக்குநராக இருந்தார் என்பதை நான் குறிப்பிட்டுச் சொல்கிறேன்.

கருணாநிதியின் பணத்தை வங்கியிலே சென்று மாற்றுகிறார் ஒரு அதிகாரி, அந்த கார்ப்பரேஷனுடைய இயக்குநராக இருந்தார் என்றால் அதற்குப்பின்...போட்டு நீங்களே முழுமை செய்து கொள்ளுங்கள் என்றுதான் சொல்ல வேண்டும். இதுதான் நிலைமை. இது கருணாநிதிக்கு தெரியாதா?

கருணாநிதியோடு பணியாற்றியவர் செயலாளராக இருந்தவர் 32 லட்ச ரூபாயை மாற்றியவர் அந்தக் கார்ப்பரேஷனுக்கு இயக்குநர் என்றால் என்ன விலைக்கு வாங்கப்பட்டது என்று கருணாநிதிக்குத் தெரியாதா?

விலை அவருக்கு தெரியாதாம், பண்ருட்டியாரை கேட்கவேண்டுமாம், புதிய கதை விடுகிறார். இப்படி ஏதாவது சொல்லிக்கொண்டு கொஞ்ச காலம் தலைவராகவே இருந்து— கட்சி எப்படிப் போனாலும் கவலையில்லை, காலந்தள்ளுவோம் என்று கருதுகிறார்.

## கழகத்தின் மாபெரும்பணி

அண்ணா தி. மு. கழகத்திற்கு மிகப்பெரிய பணி இருக்கிறது. இந்தக் கட்சியை-அண்ணாவின் கொள்கையை நிறைவேற்ற பயன்படுத்த கடமைப் பட்டிருக்கிறோம். இல்லையானால் இந்த அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் தவறு செய்தது, இவர்களும் அப்படிப்பட்டவர்கள்தான்என்று மக்கள் நம்பும்படியான நிலைமை ஏற்படுமானால் இன்னொரு தமிழர் கட்சி தமிழகத்தில் வரமுடியாது என்பதை மனதில் பதிய வைத்துக்கொள்ள வேண்டும்.

இந்த மாநாட்டில் பெரிய மனநிறைவு ஏற்பட்டிருக்கிறது. எதனால் என்றால் மதுரையில் ஒரு பெரிய பொதுக்கூட்டம் நடந்தது. பெரிய ஊர்வலம் நடந்தது. அதைப் பார்த்து கோவையில் ஒருபெரிய ஊர்வலம் நடத்தி, பார்த்தீர்களா மதுரையை விட நாங்கள் பெரிய ஊர்வலம், பொதுக்கூட்டம், நடத்திவிட்டோம் என்றார்கள்.

இங்கே நீங்கள் காட்டிய உணர்வு பண்பாடு நடத்திய ஊர்வலத்தின் மகிமை இவைகளைப் பார்த்து, கேட்காமலேயே அவரவர்களாகவே வந்து நாங்கள் எங்கள் மாவட்டத்திலே நடத்துகின்றோம் என்கிறார்கள்.

இந்த உணர்ச்சியை தூண்டிவிட்ட உங்களுக்கு நான் கரம் கூப்பி நன்றி சொல்கிறேன். இல்லாவிட்டால் பேசாமலிருந்திருப்பார்கள்; ஏதோ நாங்களும் மாநாடு நடத்துகிறோம் என்று சொல்லி இருப்பார்கள்.

இது எங்கே போய் நிற்கிறதென்றால் கழகத்திற்குள்ளேயே மாவட்டத்திற்கு மாவட்டம் போட்டி, போட்டி என்றால் பொறாமை என்று பொருளல்ல.

## தொண்டர்கள் கட்சி

தென்னாற்காடு மாவட்டத்தில் எவ்வளவோ கழகத்திற்குள் மாறுபட்ட கருத்துக்கள் இருந்தாலும், சிலர் மேல் கோபம் குறைகள் இருந்தாலும் கூட ஒட்டுமொத்தமாக கட்சியினுடைய தன்மானப்பிரச்சினை கழகத்திற்கு பெருமைசேர்க்க வேண்டிய நிலைமை என்று வந்தவுடனேயே நீங்கள் அனைவரும் ஒரே உயிராக அனைத்து உடல்களும் ஒன்று சேர்ந்தது போல பணியாற்றியிருக்கிறீர்களே, அவர்கள் அனைவருக்கும் நான் பாராட்டைத் தெரிவிக்க கடமைப்பட்டிருக்கிறேன். எவ்வளவு தான் மாவட்ட செயலாளர்கள், ஒன்றியச் செயலாளர்கள் உழைத்தாலும் கூட தொண்டர்களின் ஒத்துழைப்பு இல்லையேல் எதுவுமே இல்லை.

நான் மீண்டும் மீண்டும் சொல்கிறேன். இது தலைவர்களுடைய கட்சியல்ல, தொண்டர்கள் கட்சி. இதிலே யாராவது சிலர் நான்தான்தலைவர் அல்லது நான் வைத்ததுதான் சட்டம் என்று எண்ணுவாரேயானால் அவர் சீக்கிரமே தொண்டர்களால் தூக்கி எறியப்படுவார் என்பதை இங்கே சுட்டிக்காட்டுவது என் கடமை.

நான் மீண்டும் மீண்டும் சொல்லுகிறேன், இங்கே குருப்பிசத்திற்கு இடமில்லை. இங்கே எந்த பிரிவு என்பதற்கு இடமில்லை. அதற்காக அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தை நானும் துவக்கவில்லை.

முதலமைச்சர் வந்தாலும் சரி, பொதுச் செயலாளர் வந்தாலும் சரி, வேறு எந்த அமைச்சர்கள் வந்தாலும் சரி, பேசக் கூடிய கிளைக் கழக தொண்டர்கள் வந்தாலும் சரி மாலையைப் போடுகிறவர்கள் ஒரே மாதிரியான மாலையைத்தான் அனைவருக்கும் போடவேண்டுமே தவிர அதிலே மாற்றம் காண்பிக்கக் கூடாது.

(பலத்த கைதட்டல்)

## மாநாடு தந்த நிதி ரூ. 7 லட்சத்து 59 ஆயிரம்

பலர் உதவியாகவும் தந்து இந்த மாநாட்டின் செலவு போக ரூ. 7 லட்சத்து 59 ஆயிரத்து 638என்பதை இங்கே கணக்கு தந்திருக்கிறார்கள்.

இதை நாம் கழகத்திற்காக எடுத்துக் கொள்வதா? அண்ணா அறக்கட்டளையில் சேர்ப்பதா என்பதை செயற்குழுவில் முடிவெடுப்போம்.

இந்தக் கழகத்தை வளர்ப்பதற்காக 1972ம் ஆண்டிலிருந்து தன் உயிரை இழந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் இருக்கின்றனர். அவர்களுக்கு வாழ்வளித்தாக வேண்டும்.

பாலசுந்தரத்தை வெட்டிக் கொன்றார்களே அவரை எப்படி வெட்டிக் கொன்றார்கள் என்பதை எஸ். டி. சோமசுந்தரம் சொல்வார் என்று எதிர்பார்த்தேன். அவர் அதிகம் பேசாமல் நிறுத்திக் கொண்டார்,

அதற்கு முதல் நாள் அவர் (பாலசுந்தரம்) என்னை சென்னையிலே சந்தித்தார். நான் சிதம்பரம் போகிறேன் என்றார்.

## பயிற்சிக்கூடங்கள்

குறைந்தது 7, 8 நண்பர்கள் இல்லாமல் நீ தனியாக இருக்கக் கூடாது. எதிரிகள் உன் மீது கண் வைத்திருக்கிறார்கள். எச்சரிக்கையாக இரு என்று சொல்லி அனுப்பினேன்.

ஆனால் துணிந்த வாலிபன் என்ற காரணத்தால் அவர் ஆஸ்டலில் இருந்தார். ஆஸ்டலுக்குள் அவர் குளித்துக் கொண்டிருந்த போது உள்ளே நுழைந்தனர் எதிரிகள். அவரைதுரத்தி துரத்தி, வெட்டிக் கொன்றிருக்கிறார்கள்.

அந்த இளைஞன் இருந்திருந்தால் ஒரு அமைச்சராககூட இருந்திருக்கலாம். இல்லை. இதைப்போல் எத்தனையோ இளைஞர்களை நாம் இழந்திருக்கிறோம்.

இனி இளைஞர்களை மட்டுமல்ல. யாரையுமே கொல்லுவதற்கோ தாக்கி அழிப்பதற்கோ நாம் இடங்கொடுக்கக்கூடாது. ஆகவே நாம் எங்கேயுமே ஒற்றுமையாக இருந்தாக வேண்டும்.

இந்த ஊர்வலங்கள், கூட்டங்கள் நடக்கும்போது கருணாநிதியினுடைய யோசனைப்படி சிலரை அங்கு அனுப்பி வைக்கிறார்கள்— நம்முடைய கூட்டத்தோடு. கலவரங்கள் நடத்தக்கூடிய சந்தர்ப்பம் கிடைத்தால் செய்து விடுங்கள்; கெட்ட பெயர் அண்ணா தி. மு. கழகத்திற்கு வந்து விடட்டும் என்று.

நீங்கள் ஏழ்மையோடு இருந்தால் கூட உடல் வலிவோடு இருக்கவேண்டும். சிலம்பு விளையாட்டுகளை கற்றுக்கொள்ள வேண்டும். குத்துச்சண்டைகள் கற்றுக்கொள்ள வேண்டும். இளைஞர்கள் இவைகளை கற்றுக்கொண்டு தன்னைக் காப்பாற்றிக் கொள்ள திறமை உள்ளவராக இருக்க வேண்டும்.

ஆங்காங்கே அந்த பயிற்சிக் கூடங்களை ஆரம்பித்து கற்றுத் தேர்ந்து வலுவுள்ளவர்களாக இருக்க வேண்டும்.

தமிழகத்திலிருப்பவர்கள் எதையும் செய்ய லாயக்கற்றவர்களாக இருக்கிறார்கள். பலவீனர்களாக இருக்கிறார்கள் என்ற கெட்டபெயர் இருக்கக்கூடாது. இது நாம் யாரோடும் போட்டி போட அல்ல. எதிர்த்து தாக்குவதற்காக அல்ல. மற்றவர்களுக்கு ஆபத்து வந்தால் காப்பாற்ற. தண்ணீரில் விழுந்த ஒருவனை நீந்தத் தெரிந்தவர் தான் காப்பாற்ற முடியும். இல்லையென்றால் இவருக்கும் ஆபத்து வந்துவிடும். அதுபோல் ஆபத்திலிருப்பவரைக் காப்பாற்ற வேண்டுமானால் வித்தை தெரிந்தாகவேண்டும்.

தைரியமிருந்தால் போதாது. வித்தை வேண்டும். அதை ஆங்காங்கே அமைத்துக்கொள்ள வேண்டும். அதனால்தான் கழகக் கிளைகள் சொந்தக் கட்டிடங்களில் இருந்தாக வேண்டும்.

அடுத்த மாநாட்டில் நாங்கள் இத்தனை பேர் இவைகளை கற்றுக்கொள்ள ஆரம்பித்திருக்கிறோம் என்ற கணக்கை எனக்குச் சொல்லுங்கள். சொல்லுவீர்கள் என்று நம்புகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

---

ரூ.1 லட்சம் மதிப்புள்ள

## சந்தனக் கட்டைகள் கடத்தியவர்கள் பிடிபட்டனர்

சென்னை, ஜூன் 22- ஒரு லட்ச ரூபாய் மதிப்புள்ள சிவப்பு சந்தனக் கட்டைகளை ஆந்திராவில் இருந்து கடத்திவந்த இருவர் கைது செய்யப்பட்டனர்.

வெங்கடேசன், பாஸ்கர் ஆகிய இருவரும் 700 கிலோ சிவப்பு சந்தனக் கட்டைகளை ஒரு காரில் ஆந்திராவில் இருந்து கடத்திவந்தனர்.

மணலி அருகே இன்ஸ்பெக்டர் மனோகரன் அந்த வண்டியை மடக்கி சோதனையிட்ட போது கடத்தல் வெளிப்பட்டது.

இருவரும் கைது செய்யப்பட்டனர் காரும், சந்தனக் கட்டையும் பறிமுதல் செய்யப்பட்டது.

## அன்பழகன் உதவியாளர் மனு தள்ளுபடி

சென்னை, ஜூன் 22— தி. மு. க. பொதுச்செயலாளர் அன்பழகன் அமைச்சராக இருந்த போது அவரது உதவியாளராக இருந்தவர் கிருஷ்ணசாமி.

இவர் மீது லஞ்ச ஊழல் வழக்கு தொடரப்பட்டு இருக்கிறது.

தன்மீதுள்ள வழக்கை தள்ளுபடி செய்யவேண்டும்என்றுஇவர் கொடுத்த மனுவை நீதிபதி சிங்காரவேலு தள்ளுபடி செய்தார்.

விசேஷ கோர்ட்டில் வழக்கு நடப்பதால் சொல்லவேண்டிய விஷயத்தை அங்கே சொல்லிக்கொள்ள வாய்ப்பு இருக்கிறது என்று கூறி நீதிபதி சிங்காரவேலு அந்த மனுவைதள்ளுபடிசெய்து தீர்ப்பளித்தார்.

---

## 'அண்ணா' வழங்கும் "தொழில் மலர்"

புரட்சித்தலைவர் ஆட்சியில் தமிழகம் பெற்றுள்ள மகத்தான தொழில் வளர்ச்சியை விளக்கும் வகையில் "அண்ணா" நாளிதழ், "தொழில் மலர்" ஒன்றை வெளியிடுகிறது.

முதல்வர் புரட்சித்தலைவரின் வண்ண முகப்போடு, டெம்மி அளவில் ஏராளமான பக்கங்களோடு விரைவில் தொழில் மலர் வெளி வருகிறது.

**முதல்வர் புரட்சித்தலைவரின்** வாழ்த்தோடு அமைச்சர்கள், தொழில் அதிபர்கள், தொழிற்சங்கத் தலைவர்கள் தொழில் நுட்ப நிபுணர்கள் ஆகியோரின் கட்டுரைகளுடன் தொழில் மலர் போற்றிப் பாதுகாக்கத்தக்க வகையில் தயாராகி வருகிறது.

தேவைப்படும் பிரதிகளுக்கு ஏஜெண்டுகள் முன்கூட்டியே பதிவு செய்து கொள்ளக் கோருகிறோம்.

விலை ரூ. 1-50

நிர்வாகி.

"அண்ணா நாளிதழ்"

---

## விமான விபத்தில்...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

திற்கு ஆளானது. இப்பகுதியில் இருந்த பல பயணிகள் இந்தவிபத்தில் கொல்லப்பட்டனர்.

விபத்துக்கு ஆளான இந்த விமானத்தில் 99 பயணிகளும், 12 விமான ஊழியர்களும் சென்றனர்.

காப்டன் குட்வின் இந்த விமானத்தை ஓட்டிச் சென்றார்.

இதுவரை கிடைத்த தகவல்களின்படி இந்த விபத்தில் 16 பேர் கொல்லப்பட்டதாகவும், 23 பேர் காயமடைந்ததாகவும் தகவல் கிடைத்துள்ளது.

இறந்தவர்களில் 3 பேர் பெண்களாவர். இதில் ஒருவர் விமானப் பணிப் பெண் ஆவார்.

விமானச் சிதறல்களில் இருந்து விமான ஓட்டியின் அறையில் உள்ள ஒலிப் பதிவு பெட்டி எடுக்கப் பட்டுள்ளது.

இந்தப் பெட்டி சேதம் இன்றி தப்பியது. இதன் மூலம் விபத்து எவ்வாறு நடந்தது என தெரியவரும்.

### சென்னையில் இருந்து 55 பயணிகள்

இந்த விமானத்தில் சென்னையில் இருந்து 55 பயணிகள் ஏறிச் சென்றனர். இதில் 32 பேர் வெளி நாட்டுக்காரர்கள் ஆவார்கள்.

விமான காப்டன் உட்பட விமானஓட்டியின் அறையில் இருந்த அனைவரும் உயிர் தப்பினார்கள்.

இந்த விமானத்தில் பயணம் செய்த பாபா அணுசக்திகமிஷன் தலைவர் ராஜா ராமண்ணா காயம் ஏதும் இன்றி உயிர் தப்பினார்.

இதேபோல் குழந்தை ஒன்றும் காயம் ஏதும் இன்றி உயிர் தப்பியது.

கோபால கிருஷ்ணா என்ற பயணி தனது கைப்பெட்டியுடன் விமானத்திலிருந்து குதித்து உயிர் தப்பினார்.

விபத்துக்கு ஆளான விமானத்திலிருந்து காயம் அடைந்த பயணிகளை போலீசாரும் தீயணைப்புத் துறையினரும் மீட்டனர். பல பயணிகள் இடிபாடுகளில் சிக்கிக் கொண்டு தவித்தனர். மீட்புப் பணித் தொடர்ந்து நடந்து வருகிறது.

ஓடு பாதையில் ஏற்பட்ட இடையூறு காரணமாக மோரீஸ் நாட்டில் இருந்து பம்பாய் வந்த விமானம் சென்னைக்குத் திருப்பி விடப்பட்டது. இந்த விமானம் சென்னைக்கு காலை 6-40 வந்து பிறகு 10 மணிக்கு பம்பாய்க்குப் புறப்பட்டது.

### மத்திய அமைச்சர் அதிர்ச்சி

விபத்து செய்தி அறிந்த விமான போக்குவரத்து அமைச்சர் ஏ. பி. சர்மா, விபத்து செய்தி பெரிதும் அதிர்ச்சி அளிப்பதாக கூறினார்.

விபத்தில் பாதிக்கப்பட்டோருக்கு தனது அனுதாபங்களைத் தெரிவித்து கொண்டு அமைச்சர் சர்மா அனுதாபச் செய்தி வெளியிட்டுள்ளார்.

### 36 பேர் தப்பினர்

விமான விபத்தில் இருந்து காயமின்றி தப்பிய 36 பேர் வீடு திரும்பினர்.

விபத்தில் இறந்த விமானப்பணிப் பெண் சென்னையைச் சேர்ந்தவர். இவர் பெயர் எலிசபெத்ஜாப் என்பதாகும்; ஏர்போர்ட் காலனியில் வசித்து வந்தார்.

இவரது உறவினர்கள் இன்று மாலைபம்பாய்க்கு செல்லுகிறார்கள்.

### தகவல் தெரிய...

விபத்து குறித்து விமான நிலையத்திலும் ஏர்-இந்தியா அலுவலகத்திலும் தகவல் அறிய ஏராளமானவர்கள் கூடியுள்ளனர்.

விபத்து குறித்து தகவல் தெரிய விரும்புவோர் 847794 என்ற தொலைபேசியில், அதிகாரி டிமெல்லாவுடன் தொடர்பு கொண்டு கேட்டறியலாம்.

பம்பாயில் 569868 என்ற தொலைபேசியுடன் தொடர்பு கொண்டு தகவல் தெரிந்துகொள்ளலாம்.

கடலூர், நெய்வேலி, சேலம் பகுதிகள் தொழில் வளம்பெற

# கடலூர் துறைமுகத்தை விரிவு படுத்தித் தருக

## மத்திய அரசுக்கு கடலூர் கழக மாநாடு கோரிக்கை

கடலூர், ஜூன் 22- கடலூர், நெய்வேலி, சேலம் போன்ற பகுதிகள் தொழில் வளம் பெற கடலூர் துறைமுகத்தை விரிவு படுத்த வேண்டும் என்று மத்திய அரசை வற்புறுத்தி கடலூர் கழக மாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

கடலூரில் நடைபெற்ற கழக மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களும், அவற்றை முன் மொழிந்தோர் வழி மொழிந்தோர் விவரமும் வருமாறு:-

### இரங்கல் தீர்மானம்

கர்நாடக மாநில முன்னாள் முதலமைச்சர் தேவராஜ் அர்ஸ்.

புதுவை மாநில முன்னாள் முதலமைச்சர் வெங்கட சுப்பையா.

சென்னை மாநகர், 4-வது வட்டச்செயலாளர் மேகவர்ணம்

இராம. வெள்ளையன்

செங்கை மாவட்டம், கும்முடிப்பூண்டி ரயில் விபத்தில் உயிரிழந்தோர்.

நடிகர் திருமலை

தென் ஆற்காடு மாவட்டம், திண்டிவனம் வட்டம், சித்தனி கிராமத்தைச் சேர்ந்த கழகத் தோழர் ஏ.ராமச்சந்திரன்.

ஆகியோரின் மறைவுக்கு இம்மாநாடு தன் ஆழ்ந்த இரங்கலையும், வருத்தத்தையும் தெரிவித்துக் கொள்கிறது.

### தொழிற்சாலைக்கு அனுமதி தருக

தமிழகத்தில் கடலூரில் பெட்ரோ கெமிகல்ஸ் தொழிற்சாலை ஒன்று நிறுவ இந்திய அரசு முன்வர வேண்டுமென்று தமிழக அரசின் நீண்ட நாளைய கோரிக்கையை உடனடியாக நிறைவேற்றித்தர வேண்டுமென இம்மாநாடு மத்திய அரசைக் கேட்டுக் கொள்கிறது.

முன்மொழிபவர்கள்: எம். கண்ணன் எம். எல். ஏ. கண்டமங்கலம்
எஸ். கலிதீர்த்தான், எம். எல். ஏ.

வழிமொழிபவர்கள்: ஏ. ரகுபதி—கடலூர் நகரச் செயலாளர்
அன்பு தண்டபாணி—கடலூர்—ஒன்றியச் செயலாளர்
வேலாயுதம்—நெல்லிக்குப்பம் நகரச் செயலாளர்

### கடலூர் துறைமுகத்தை விரிவுபடுத்துக

சென்னைத் துறைமுகத்தின் நெரிசலை ஓரளவுக்கு தீர்க்கும் வகையிலும், கடலூர்—நெய்வேலி — சேலம் பகுதிகள் தொழில் முன்னேற்றம் பெறும் வகையிலும், ஏற்கனவே சிறிய துறைமுகமாக உள்ள கடலூர் துறைமுகத்தை விரிவுபடுத்த வேண்டுமென்று இந்திய அரசை இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

முன்மொழிபவர்: ஏ. தங்கராசு, எம். எல். ஏ., குறிஞ்சிப்பாடி

வழிமொழிபவர்கள்: அ. ப. சிவராமன்— பண்ருட்டி நகரச் செயலாளர்
வேணுகோபால்-பண்ருட்டி ஒன்றிய செயலாளர்
கணேசன் — வானூர் ஒன்றிய செயலாளர்.

### மேம்பாலம் அமைப்பீர்

கடலூர் நகரப் பகுதியின் இடையில் உள்ள இருப்புப்பாதை, போக்குவரத்து நெரிசலை உண்டாக்குவதால், அவ்விருப்புப் பாதையை எளிதில் கடந்திட ஒரு மேம்பாலம் அமைக்க தமிழக அரசும், இந்திய அரசும் உரிய நடவடிக்கை எடுக்க வேண்டுமென இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

முன்மொழிபவர்: வி. சுப்பிரமணியம் எம். எல். ஏ.

வழிமொழிபவர்கள்: ஜிலால் முன்னாள் எம். எல். ஏ. கடலூர்.
செல்வராசு-குறிஞ்சிப்பாடி ஒன்றிய செயலாளர்,
ஜி. கிருஷ்ணசாமி-செஞ்சி

### பெண்ணாற்றுப்பாலம்

தென் ஆற்காடு மாவட்டம், கடலூருக்கு அருகில் ஓடும் பெண்ணாற்றின் மீதுள்ள பாலத்தை அகலப்படுத்த உரிய நடவடிக்கையை மேற்கொள்ள வேண்டுமென்று தமிழக அரசை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

முன்மொழிபவர்: அ. சின்னதுரை எம். எல். ஏ.

வழிமொழிபவர்கள்: ராமஜெயம் — மரக்காணம் ஒன்றிய செயலாளர்
வள்ளூர் இராசரத்தினம்(மணி) கோலியனூர்ஒன்றியசெயலாளர்
எம். சுப்பிரமணியம் முன்னாள் எம்.எல்.ஏ. சின்னசேலம்

### புரட்சித்தலைவர் அரசுக்கு நன்றி

தென் ஆற்காடு,சேலம் மாவட்டங்களில் வாழும் மக்களின் நலத்தைப் பேணும் வகையில் DANDIA என்ற திட்டத்தை ரூ. 15 கோடி செலவில் அமுல்படுத்த தமிழக அரசு திட்டம் வகுத்துள்ளதை இம்மாநாடு வரவேற்று புரட்சித்தலைவருக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறது.

முன்மொழிபவர்: ஆர். பாபு கோவிந்தராசன் எம்.எல்.ஏ. கடலூர்.

வழிமொழிபவர்கள்: சதாசிவம் (சேட் விக்கிரவாண்டிஒன்றிய செயலாளர்
பி. கிருஷ்ணன், முன்னாள் எம்.எல்.ஏ. விழுப்புரம்
செல்வராஜ் — கண்டமங்கலம் ஒன்றியசெயலாளர்

### மூன்றாவது நிலக்கரி சுரங்கம்

தமிழகத்தில் வளர்ந்துவரும் மின் தேவையை நிறைவு செய்யும் வகையில், தென்ஆற்காடு மாவட்டத்தில் உள்ள நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனத்தில் மூன்றாவது சுரங்கம் வெட்டி அனல் மின் நிலையம் அமைத்திட இந்திய அரசு முன்வர வேண்டுமென்று இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

முன்மொழிபவர்: கே. ஆர். கணபதி, எம். எல். ஏ. சிதம்பரம்

வழிமொழிபவர்கள்: எஸ். சகாதேவன் — வல்லம் ஒன்றிய செயலாளர்
வெ. கலியமூர்த்தி, எம்.எல்.ஏ. மங்களூர்
முத்து. கோவிந்தராசன்

### இந்துஸ்தான் போட்டோ பிலிம்

இந்துஸ்தான் போட்டோ பிலிம் தொழிற்சாலையின் கலர் பிலிம் விஸ்தரிப்புத் திட்டத்தை விரைவில் ஊட்டியில் அமைக்க மத்திய அரசை இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது. எட்டு ஆண்டுகாலமாக பல மத்திய அமைச்சர்கள் ஊட்டியில்அமைக்கப்படும் என்று தெரிவித்தும் இதுவரை நிறைவேற்றப்படாமல் இருப்பது கவலைக்குரியது.

வேலைவாய்ப்பு மற்றும் தொழில் வளர்ச்சியில் பின்தங்கிய நீலகிரி மாவட்ட வளர்ச்சியைக் கருதி 3000 பேருக்கு வேலை வாய்ப்பு உள்ள இத்திட்டத்தை உடன் அமுல்படுத்த மத்திய அரசை இம்மாநாடு வற்புறுத்துகிறது.

முன்மொழிபவர்: வி. வி. சுவாமிநாதன், எம். எல். ஏ., புவனகிரி

வழிமொழிபவர்கள்: தங்கவேல்-மேல் மலையனூர்ஒன்றியசெயலாளர்
கே. ரெங்கசாமி எம் எல் ஏ. உளுந்தூர்பேட்டை
ராமநாதன் முன்னாள் எம்எல்ஏ விருத்தாசலம்

## அமைச்சர் குழந்தைவேலு பேச்சு:

# புரட்சித்தலைவர் ஆட்சியில் குறைந்த வரியில்நிறைந்தவசதிகள்

**காஞ்சிபுரம், ஜூன் 22- குறைந்த அளவு வரி விதித்து, மக்களுக்கு நிறைந்த அளவு வசதிகளைச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் செயல்பட்டு வருகிறார் என்று அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.**

பாங்க் ஆப் தமிழ்நாட்டின் 82வது கிளைத் திறப்பு விழா காஞ்சிபுரத்தில் நடைபெற்றது. விழாவிற்கு விஸ்வநாதன் தலைமை தாங்கினார்.

வங்கியின் தலைவர் வி. எஸ். மணி அனைவரையும் வரவேற்றார். அமைச்சர் குழந்தைவேலு விழாவில் கலந்து கொண்டு வங்கியின் புதிய கிளையைத் திறந்து வைத்தார்.

அமைச்சர் குழந்தைவேலு பேசுகையில் கூறியதாவது:

கடலூர் மாநாட்டில் அண்ணா படத்தினை திறந்து வைத்த பின் அடுத்த நிகழ்ச்சியாக அண்ணன் பிறந்த காஞ்சி மண்ணில் தமிழ்நாட்டின் பெயரைத் தாங்கியிருக்கும் வங்கியைத் திறந்து வைப்பதற்கு சந்தர்ப்ப மளித்தமைக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை மாநிலமென் றிருந்ததைத் தமிழ்நாடு என்று மாற்றியதோடு தன் வாழ்நாளெல்லாம் தமிழுக்காக, தமிழருக்காக வாழ்ந்தவர் அண்ணா. தமிழ்வளர்த்த அண்ணன் பிறந்த ஊரில் தமிழ்நாடு வங்கி அமைவது சாலப் பொருத்தமே.

### புரட்சித்தலைவர் நோக்கம்

தமிழ்நாட்டின் பெயரைத் தாங்கியுள்ள இந்த வங்கிவளர்வதற்குத்தமிழ்நாடு அரசு தன்னாலியன்ற அனைத்து உதவிகளையும் செய்யும்.

அதுபோல் அரசின் நல்ல திட்டங்களுக்கும் வங்கிகள் பெரிதும் உதவ வேண்டும்.

அதிக வரி விதிக்காமல் அதே சமயத்தில் மக்களுக்கு அதிக வசதிகள் செய்ய வேண்டும் என்பதே புரட்சித்தலைவரின் நோக்கம். இதுவரை எந்த அரசும் செய்யாத பல சாதனைகளை கழக அரசு புரிந்து வருகிறது. மற்ற மாநிலத்தவரெல்லாம் பாராட்டும் திட்டமாக கிராம தன்னிறைவுத் திட்டம் அமைந்துள்ளது. இதுவரை 250 கோடி ரூபாய்வரை இத்திட்டத்தின் கீழ் செலவிடப்பட்டுள்ளது.

### பொதுநல நோக்கு

பின்தங்கியுள்ள, அதாவது ஏழ்மைக் கோட்டிற்குக் கீழுள்ள மக்கள் மேம்பாட்டை வதையே குறிக்கோளாகக்கொண்டு இந்த அரசு செயல்படுகிறது. கிராமமறுமலர்ச்சி காண வங்கிகள் கிராமப் புறமக்களுக்கு அதிககடன் வசதி செய்து தர வேண்டும். வங்கிகள் பொது நல நோக்கில் செயல்பட வேண்டும்.

நகராட்சிகள் போதிய பண வசதியின்மையால் மக்கள் நல்வாழ்வுத் திட்டங்களை நிறைவேற்ற முடியாமல் இருக்கின்றன. இந்நிலையைப் போக்கத்தான் நகராட்சிகளுக்கும் தன்னிறைவு திட்டம் விரிவுபடுத்தப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ் காஞ்சிபுரத்திற்கு ரூ. 25லட்சம் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

### மைய அரசிடம் கோரிக்கை

நகராட்சிகளின் வருமானத்தை பெருக்க 'கமர்சியல் காம்ப்ளெக்ஸ்' கட்டத் திட்டமிட்டுசெயல்படுத்தி வருகிறோம். இத்திட்டத்திற்கு உதவ 25 கோடி ரூபாய் கடன் தர வேண்டுமென்று மைய அரசிற்குத் தமிழ்நாடு அரசின் சார்பில் கோரிக்கை விடப்பட்டது. ஆனால் மைய அரசு மறுத்தது. பின் மீண்டும் தமிழக அரசின் சார்பில் விளக்கக் கடிதம் அனுப்பப்பட்டுள்ளது. மைய அரசு இதற்கு உதவுமென்று நம்புகிறோம்.

### தமிழ்க் கலாசார காலம்

தமிழகத்தில் வேறு மாநிலங்களின் பெயரால் அமைந்துள்ள வங்கிகள் உள்ளன. அவர்கள் தங்கள் மாநிலத்தைச் சேர்ந்தவர்களுக்கே அதிக அளவில் கடன் தருகின்றனர். இந்நிலை மாறவேண்டும்.

வங்கிகள் தேசியமயமாக்கப்பட வேண்டுமெனில் அதன் வைப்புத் தொகை 100 கோடி ரூபாய்க்குமேல் இருக்க வேண்டும் என்பதை மாற்றி 50 கோடி ரூபாய் இருந்தாலே அந்த வங்கிகள் தேசிய வங்கிகள் என்று அறிவிக்கப்பட வேண்டும்இதுகுறித்துமைய

(3-ம் பத்தி பார்க்க)

(4-ம் பத்தி தொடர்ச்சி)

அரசு பரிசீலனை செய்ய வேண்டும். வளர்ந்து வரும் வங்கிகளுக்கு மைய அரசு பாதுகாப்பு அளிக்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலுபேசினார்.

விழா முடிவில் காஞ்சிபுரம் கிளையின் மேலாளர் சந்திரமோகன் நன்றி கூறினார்.

## பூலாவரி சுகுமாரன் 8-வது நினைவு நாள்

சேலம், ஜூன் 22— தியாகச் சுடர் பூலாவரி சுகுமாரன் 8-ம் ஆண்டு நினைவு நாள் 24-ம் தேதி வருகிறது.

24-ம் தேதி காலை 9.30 மணிக்கு நினைவு அஞ்சலி ஊர்வலம் பெரியார் பாலத்தில் இருந்து புறப்படுகிறது.

பூலாவரி சுகுமாரன் கல்லறைசென்று நினைவஞ்சலி செலுத்த கழகத்தவர்- மன்றத்தவர் திரளாக வருமாறு சேலம் ஒன்றிய செயலாளர் கே. பழனிச்சாமி கேட்டுக் கொண்டுள்ளார்.

## பஸ் விபத்து: 30 பேர் காயம்

திருநெல்வேலி, ஜூன் 22— திருநெல்வேலியில் இருந்து தூத்துக்குடி சென்ற பஸ் ஒன்று எருமை மாட்டின் மீது மோதி விபத்துக்கு ஆளானது.

எல்லைமயக்கம்பிள்ளை என்ற இடத்தில் இவ் விபத்து நடந்தது.

இவ்விபத்தில் டிரைவர் உள்ளிட்ட 30 பேர் காயமடைந்தனர். இந்த பஸ்ஸில் பயணம் செய்த 3 விசாரணைக் கைதிகள் மற்றும் 5 போலீசாரும் காயமடைந்தனர்.



## அமைச்சர் கோமதி-சீனிவாசன் நிகழ்ச்சிகள்

24-ந் தேதி மாலை 3மணி:- வந்தவாசி பஞ்சாயத்து யூனியன் பள்ளிக்கட்டிடத் திறப்பு விழா:

4-30 மணி:-கோட்டை மருதாடு பள்ளிக்கட்டிடத் திறப்பு விழா.

6 மணி:- உளுந்தை பள்ளிக் கட்டிடத் திறப்பு விழா. 7 மணி- சாலவேடு பள்ளிக்கட்டிடத் திறப்பு விழா.

## மக்கள் புரட்சித்தலைவர் பக்கம் இருக்கிறார்கள்

# எத்தனைபோராட்டம் நடத்தினாலும் கழக அரசை மாற்றமுடியாது

### கடலூர் மாநாட்டில் சத்தியவாணிமுத்து பேச்சு

**கடலூர், ஜூன் 22. புரட்சித்தலைவர் பக்கம் மக்கள இருக்கிறார்கள். எத்தனை போராட்டம் நடத்தினாலும் கழக ஆட்சியை யாராலும் அசைக்க முடியாது என்று சத்திய வாணிமுத்து எம்.பி கூறினார்.**

தென்னாற்காடு மாவட்ட கழக மாநாட்டின் மகளிர் மாநட்டில் கலந்துகொண்டு டாக்டர் சத்தியவாணிமுத்து எம்.பி. பேசுகையில் கூறியதாவது,—

எத்தனை போராட்டம் நடத்தினாலும் இந்த ஆட்சியை அசைக்க முடியாது என்பதற்கு இந்த வரலாற்று சிறப்புமிக்க ஊர்வலமும், மாநாடும் அத்தாட்சியாக விளங்குகிறது.

இந்த ஆட்சியை அசைக்க முடியாது என்பதை எதிரிகள் உணரும் வகையில் இந்த ஊர்வலம் அமைந்துள்ளது.

மக்கள் தலைவர் புரட்சித்தலைவரின் பின்னால் மக்கள் இருக்கிறார்கள் என்பதை பிரதமர் உணர்ந்திருக்கிறார்.

ஆனால் அந்த நம்பிக்கையை மாற்ற கருணாநிதி முயற்சி செய்து வருகிறார்.

இன்னொரு முறை கருணாநிதியுடன் கூட்டுச் சேர்ந்தால் வெற்றி கிடைக்காது என்பதை பிரதமர் உணர்ந்திருக்கிறார். புரட்சித்தலைவர் பலத்தை உணர்த்தும் வகையில் இந்த மாநாடு அமைந்திருக்கிறது. இந்த பலம் மேலும் மேலும் உயர்ந்திருக்கிறது என்பதுதான் இந்த மாநாடு.

### பெண்ணின் பெருமை

பெண்ணின் பெருமைக்கு ஒரு உதாரணத்தை சொல்ல விரும்புகிறேன்.

இந்திராகாந்தி தேர்தலில் தோற்றாலும் பிறகு மீண்டும் வெற்றி பெற்று பிரதமர்ஆனார். ஆனால் கருணாநிதியால் மீண்டும் ஆட்சிக்கு வரமுடியவில்லை.

கருணாநிதி முதலமைச்சராக இருந்தபோது ஒரு முஸ்லிம்சிறுமி கற்பழிக்கப் பட்டார். பெற்றவர்கள் பல தடவை புகார் கொடுத்தும் எந்தவித நடவடிக்கையும் எடுக்கப் படவில்லை,

பெண்களை மதிப்பவர் புரட்சித்தலைவர். பெண்கள் மாநாடே இதற்கு உதாரணம். பெண்களுக்கு தகப்பன், பாட்டன் சொத்தில் கண்டிப்பாக பங்கு அளித்தாக வேண்டும். இதற்காக ஒரு சட்டமே கொண்டு வர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு சத்தியவாணிமுத்து கூறினார்.

# ஜனாதிபதி தேர்தல்: இ.காங்கிரஸ் சார்பில் ஜைல்சிங் போட்டி

### ஹிரேன் முகர்ஜி எதிர்க்கட்சி வேட்பாளர்

**புதுடெல்லி, ஜூன் 22- இந்தியக் குடியரசுத் தலைவர் தேர்தலில் இந்திராகாங்கிரஸ் வேட்பாளராக மத்திய உள்துறை அமைச்சர் ஜைல்சிங் போட்டியிடுகிறார்.**

டெல்லியில் இந்திரா காங்கிரஸ் கட்சியின் ஆட்சி மன்றக்குழுக் கூட்டம் நடந்தது. ஒரு மணி நேர விவாதத்திற்குப் பின்னர் ஜைல்சிங்கை வேட்பாளராக நிறுத்துவது என்று இந்தக்கூட்டத்தில் முடிவு செய்யப் பட்டது.

இந்தியக் குடியரசுத் தலைவராக சீக்கிய சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவர் தேர்ந்தெடுக்கப் பட இருப்பது இதுவே முதன்முறையாகும்.

குடியரசுத் தலைவர் தேர்தலில் ஹிரேன் முகர்ஜியை வேட்பாளராக நிறுத்துவது என்று எதிர்க்கட்சி வரிசையில் உள்ள ஒன்பது கட்சிகள் முடிவு செய்திருக்கின்றன.

குடியரசுத் தலைவர் தேர்தலில் போட்டியிடுபவர்கள் வேட்பு மனுத் தாக்கல் செய்ய நாளை (23-ம் தேதி) கடைசி நாளாகும். மறுநாள் வேட்புமனுக்கள் பரிசீலிக் கப்படும்.

### 7 பேர் மனுக்கள் தள்ளுபடி

ஜூலை 12-ம் தேதிகுடியரசுத் தலைவர் தேர்தல் நடைபெறும்.

குடியரசுத் தலைவர் தேர்தலுக்கு இன்றுவரை 12 பேர் வேட்பு மனுத் தாக்கல் செய்திருந்தனர். இவர்கள் அனைவரும் சுயேச்சைகள். இவர்களில் 7 பேர்களுடைய வேட்பு மனுக்கள் நிராகரிக்கப்பட்டுவிட்டன. பார்லிமெண்ட் தொகுதியில் தாங்கள் வாக்காளர்கள் என்பதற்கான சான்றிதழ்களைக்கூட இவர்கள் சமர்ப்பிக்கவில்லை. எனவே இவர்களுடைய வேட்பு மனுக்கள் நிராகரிக்கப்பட்டன.

## ஜனாதிபதி தேர்தல்:

### ஜைல்சிங் வேட்பு மனு தாக்கல்

புதுடெல்லி, ஜூன் 22— ஜனாதிபதி தேர்தலுக்கு தமது வேட்பு மனுவை ஜைல்சிங் தாக்கல் செய்தார்.

ஜனாதிபதித் தேர்தலில் போட்டியிடுவதை ஒட்டி, மத்திய உள்துறை அமைச்சர் பதவியை அவர் ராஜினாமா செய்தார்.

தேர்தல் அதிகாரிசுதார் ஷான் அகர்வால் முன்பு ஜைல்சிங் தனது வேட்பு மனுவைத்தாக்கல் செய்தார்.

## இங்கிலாந்து இளவரசர்

# சார்லஸ் மனைவி டயானாவுக்கு ஆண் குழந்தை பிறந்தது

லண்டன், ஜூன் 22— இங்கிலாந்து நாட்டு இளவரசர் சார்லஸ் மனைவி டயானாவுக்கு ஆண் குழந்தை பிறந்துள்ளது.

தாயும், சேயும் நலமாக இருப்பதாக பக்கிங்காம் அரண்மனை தகவல் ஒன்று அறிவித்துள்ளது. குழந்தை 7 பவுண்ட் எடையில் உள்ளது.

குழந்தை பிறக்கும் போது இளவரசர்சார்லஸ் டயானா அருகிலேயே இருந்தார்,

16 மணிநேர இடுப்பு வலிக்குப் பிறகு குழந்தை பிறந்தது.

தன் மனைவிக்குதானே பிரசவம் பார்த்த இளவரசர்சார்லஸ்விசேஷபடிப்பு கூட படித்து வந்தார். குழந்தை பிறக்கும் வரை இளவரசர் டயானாவைவிட்டு நகரவில்லை.

நீலவிழிகளோடு கையைக்காலைஉதைத்து அழுத தன் குழந்தையின் கோலமுகத்தைக் கண்ட பிறகுதான் சார்லஸ் வெளியே சென்றார்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him as All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road. Madras-600 029. Editor: E. PARASURAMAN.



## டைரக்டர் ஜெனரல் ஆப் ஹெல்த் சர்வீஸஸ்

### புதுடெல்லி

### VOCABULARY OF MEDICAL STORES (VMS) புதுப்பித்தல்

மத்திய அரசு, மாநில அரசு, மருத்துவமனைகள் மற்றும் டிஸ்பென்ஸரிகள் மற்றும் உள்ளூர் மருத்துவ நிலையங்கள் மற்றும் மத்திய அரசு சுகாதார திட்டங்கள் ஆகியவர்களின் உபயோகத்திற்காகவும் அவர்களுக்கு தேவைப்படும் இனங்களின் சப்ளையர்களை தெரிந்து கொள்வதற்காகவும்,

சுகாதாரம் மற்றும் குடும்பநல அமைச்சகத்தின் டைரக்டர் ஜெனரல் ஆப் ஹெல்த் சர்வீஸஸ் சேர்ந்த மருந்தக ஸ்டோர் நிறுவனத்தினரால் (Medical Store Organisation) பராமரிக்கப்பட்டு வரும் மெடிக்கல் ஸ்டோர்ஸ் பட்டியலை (VMS) திருத்தி அமைக்க உத்தேசிக்கப்பட்டுள்ளது.

கீழ்க்காணும் பகுதிகள் மெடிக்கல் ஸ்டோர்ஸ் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளது.

1) Drugs Including Proprietory Drugs 2) Veterinary Drugs 3) Asptic Furniture 4) Anaesthetics Appliances 5) General Instruments and Appliances 6) Gynaecoligical and Obstetric Instruments 7) Surgical Dressings: 8) Ligatures 9) Nursing Appliances 10) Laboratory Appliances 11) Laboratory Stains and Chemicals 12) Veterinary Instruments and Appliances.

12. முக்கியமானவை! இந்திய மருத்துவத்தில் (Indian Pharma Copocia) சேர்க்கப்பட்டுள்ள மருந்துகள் மற்றும் தனி மருந்து வகைகள் ஆகியவை பொதுப் பெயர்களில் மட்டுமே சேர்க்கப்பட வேண்டும்.

மேற்கண்ட இனங்களை தயாரிக்கும். எல்லா தயாரிப்பாளர்களும் அரசாங்க மருத்துவ ஸ்டோர் டெப்போக்களுக்கு சப்ளைகள் செய்வதில் விருப்பமிருப்பின் கீழ்க்காணும் விவரங்களை Dr. ஆர். ஸி. சர்மா, பொது துணை இயக்குனர் (ஸ்டோர்ஸ்), டைரக்டர் ஜெனரல் ஆப் ஹெல்த் சர்வீஸஸ், நிர்மாண் பவன், புதுடில்லி - 110011 அவர்களுக்கு இந்த விளம்பரம் பிரசுரமான தேதியிலிருந்து மூன்று வார காலத்திற்குள் விண்ணப்பிக்க வேண்டும்.

1. தயாரிப்பாளரின் பெயர், 2. தயாரிப்பு இனங்களின் பெயர் 3. ஷை இனத்தின் கூட்டமைப்பு (Composition) 4. மருந்துகள் செயல்படும் விதம் மற்றும் அதன் தரம் (Classification & Activity) 5. குறிப்புகள் (Specifications) 6. கடந்த மூன்று ஆண்டு காலத்தில், மத்திய-மாநில அரசு மருத்துவமனைகள் டிஸ்பென்ஸரிகள், மருத்துவ நிலையங்கள் மற்றும் மெடிக்கல்ஸ்டோர் டெப்போக்கள் ஆகியவர்களுக்கு சப்ளை செய்யப்பட்ட விற்பனை மதிப்பு (அளவு மற்றும் தொகையின் மதிப்பு).

davp-552 (18) 82



## அணுசக்தி இலாகா

### சென்னை அணுமின்சக்தி திட்டம்

டெண்டர் எண்: SF (CF) 6-82 சென்னை அணுசக்தி திட்டம் ஸ்தலத்திலுள்ள RB II SYSTEM VENTILATIONக்கு MS DUCTSகள் சோதனைசெய்து நிறுவி இணைத்து மற்றும் இணைபாகங்கள் & உபகரணங்கள் அமைப்பதற்கான முத்திரையிட்ட டெண்டர்கள், திட்ட இயக்குனர், சென்னை அணுமின் சக்தி திட்டம், கல்பாக்கம் போஸ்ட், 603, 102, தமிழ்நாடு அவர்களால் வரவேற்கப்படுகின்றது. E-C ரூ.2.72 லட்சங்கள். E-M ரூ.6,800- செக்யூரிட்டி டெபாஸிட் ரூ. 21,100- முடிக்கப்படவேண்டிய காலம் 12 மாதங்கள். (2) ரீயாக்டர் கட்டிடம், ரீயாக்டர் கட்டிடம் II மற்றும் டர்பைன் கட்டிடம் II ஆகியவற்றில் GI.ductsசோதனை செய்தல், நிறுவுதல் மற்றும் இணைத்தல். E-C ரூ.74,000 டேவணித்தொகை ரூ. 1,850 செக்யூரிட்டி டெபாஸிட் ரூ. 7,400 முடிக்கவேண்டிய காலம் 9 மாதங்கள்.

டெண்டர் பத்திரங்கள், அக்கவுண்ட்ஸ் ஆபீஸர், சென்னை அணுமின் சக்தி திட்டம், கல்பாக்கம்-603102 அவர்களிடமிருந்து 1-7-82 முதல் 20-7-82 வரை ஒவ்வொரு வேலைக்கும் ரூ. 10- + வி. வரி சேர்த்து ரொக்கமாகவோ அல்லது மணியார்டர் மூலமோ செலுத்தி (திருப்பியளிக்கப் படமாட்டாது) எல்லா அலுவலக நாட்களிலும் பெற்றுக் கொள்ளலாம். டெண்டர்வரைபடங்கள் இனம் 1 க்கு ரூ. 200, இனம் 2 க்கு ரூ. 100 வீதம் டெபாஸிட் செலுத்தி பெற்றுக் கொள்ளலாம். தேர்ந்தெடுக்கப்படாத டெண்டர்தாரர்கள் வரைபடங்களை நல்ல நிலைமையில் திருப்பிக் கொடுத்தால் டெபாஸிட் தொகை திருப்பி அளிக்கப் படும்.

davp-645 (93)82

# கலைவிருந்து

## ராதா செருப்புக்கு கார்த்திக் முத்தம்

கார்த்திக்கும், ராதாவும் பக்கத்து பக்கத்து வீட்டிலிருக்கின்றனர். ராதா வீட்டில் ரோஜா மலர்ந்து காட்சி யளிக்கிறது. இதைப் பறிக்க கார்த்திக் தூண்டிலைப் போடுகிறார். இதைப் பார்த்த ராதா தூண்டிலில்தன்செருப்பை மாட்டி விடுகிறார்.

தூண்டிலை எடுத்த கார்த்திக் தூண்டிலிலிருந்த செருப்பை எடுத்து 'அழகுத் திருப் பாதங்களைச் சுமந்த முத்துப்பல்லக்கே, செருப்பே உன்னை ஆராதனை செய்கிறேன்' என்று கூறி முத்தமிடுகிறார்.

—இப்படியொரு இனிய காட்சி பைரவி பிலிம் சாரின் 'பக்கத்து வீட்டு ராஜாவிற்காக' படமாக்கப்பட்டது.

கார்த்திக் - ராதா ஜோடியுடன் ஷாநவாஸ்-ராணிபத்மினி ஜோடியும் நடிக்கின்றனர். எஸ்.எஸ். சந்திரன், சி. ஐ. டி. சகுந்தலா, மனோரமா, கவுண்டமணி மற்றும் பலர் நடிக்கின்றனர்.

கலைஞானத்தின் மூலக் கதைக்கு திரைக்கதை வசனமெழுதுகிறார் பனசை மணியன். சங்கர்-கணேஷ் இசையமைக்க, ரவிபாபு ஒளிப்பதிவு செய்கிறார். இப்படத்தை இயக்கும் பொறுப்பை எம். பாஸ்கர் ஏற்றுள்ளார்.

## வெண் திரை வாணி

சோழா கலாலயம் சார்பில் ஜெயசித்ரா 100படங்களில் நடித்து முடித்ததற்காக பாராட்டு விழா நடைபெற்றது

விழாவில் சபாநாயகர் ராசாராம், சிவாஜி, எஸ். எஸ். ஆர். ஜெய்சங்கர், விஜயகுமார், முரளி மோகன், கே. ஆர். விஜயா, மஞ்சுளா, தீபா உட்பட திரளான கலை உலகப்பிரமுகர்கள்கலந்து கொண்டனர். இவ்விழாவில் ஜெயசித்ராவிற்கு "வெண் திரை வாணி' என்ற பட்டம் வழங்கப் பட்டது. கமிஷனர்ஸ்ரீபால் கலந்து கொண்டு விழா மலரை வெளியிட ஏவி. எம். சரவணன் பெற்றுக் கொண்டார்.

*

## சரிதாவுக்கு ஆசைவார்த்தை காட்டி ஸ்ரீகாந்த் மோசடி

ஹேமமாலினியின் தாயார் ஜெயா சக்கரவர்த்தியின் வண்ணப் படம் பண்ணைபுரத்து பாண்டவர்கள். பண்ணையார் ஸ்ரீகாந்த் பெரிய மனித வேடம் போட்டுக் கொண்டு ஊரை ஏமாற்றுகிறார். அபலைப் பெண்களின் கற்பை சூறையாடுகிறார். இவருடைய கொடுமையால் பாதிக்கப்பட்ட ஐவர் சேர்ந்து இவரைப் பழி வாங்குகின்றனர். சரிதா, ஸ்ரீகாந்தால் ஆசை வார்த்தைக் காட்டி வஞ்சிக்கப்படுகிறார்.

புட்டண்ணாவின் கதைக்கு பாகுமணி வசனம் எழுதியுள்ளார்.

பாடல்களை கவியரசு கண்ணதாசனும் புலமைப் பித்தனும் தீட்டியுள்ளனர். இசை கங்கை அமரன். ஜேசுதாஸ், வாணிஜெயராம், சைலஜா, இளையராஜா, மலேஷிய வாசுதேவன் ஆகியோர் பின்னணிபாடியுள்ளனர். லெனின் இப் படத்தை இயக்கியுள்ளார்.

இதில் சரத்பாபு, ஸ்ரீகாந்த், சுருளிராஜன், சிவச்சந்திரன், ஒய். ஜி. மகேந்திரன், சரிதா கீதா மற்றும் பலர் நடித்துள்ளனர். இப்படம் விரைவில் திரைக்கு வருமெனத் தெரிகிறது.

*

ஆசை வந்தால் சேவலைக் கூட அணைக்கத் தோன்றுமோ! பண்ணை புரத்து பாண்டவர்கள் படத்தில் சரிதா.

### குள்ளக்கவி

குள்ளக்கவி என்பது படத்தின் பெயரோஎன்று நினைத்து விடாதீர்கள், குள்ளக்கவி என்பது கே. எஸ். கோபாலகிருஷ்ணனின் பெயர்தான். மாடர்ன் தியேட்டர்சார் கே. எஸ். கோபாலகிருஷ்ணனுக்கு இந்தப் பெயரைச் சூட்டினார்கள். இத்தகவலை சிவாஜி கணேசன் சோழா கலாலயம் சார்பில் நடத்தப்பட்ட விழாவில் கூறினார்.

*

### அமர்க்களம்

பாலாஜி கிரியேஷன்சாரின் வண்ணப் படைப்பு அமர்க்களம். இதில் கதாநாயகியாக சாந்தி கிருஷ்ணா நடிக்கிறார். சுபத்ரா, பூர்ணிமாதேவி, கே. கே. சவுந்தர் மற்றும் பலர் நடிக்கும் இப்படத்தின் கதை வசனத்தை கலியபெருமாள் எழுதியுள்ளார். பாடல்கள் எழுதி இசையமைப்பதுடன் இயக்கும் பொறுப்பையும் எஸ். எம். பஷீர் ஏற்றுள்ளார். கதாநாயகன் தேர்வு நடைபெற்று வருகிறது.

## கவியரசு மகன் டைரக்டராகிறார்

மறைந்தகவியரசுகண்ணதாசன் மகன் கலைவாணன். இவர் கதாநாயகனாக நடித்த படம் அன்புள்ள அத்தான். இதில் இவருக்கு ஜோடியாக ஷோபா நடித்தார்.

இப்பொழுது கலைவாணன் முதல் முறையாக 'இளமை ஒரு ராகம்' என்னும் படத்தை இயக்கும் பொறுப்பை ஏற்றுள்ளார். இப்படத்திற்குகதை வசனமெழுதும் பொறுப்பை கே. சி. மெய்யப்ப அரசு ஏற்றுள்ளார். சிவாஜி ராஜா இசையமைக்கிறார்.

ஆசைகளுக்கு

### சிலுக்குவின் கவர்ச்சி நடனம்

மன்சூர் கிரியேஷன் சார் தயாரித்து வரும் படம் 'ஆசைகள்'. இப் படத்திற்காக சிலுக்கு சுமிதா ஆடிய கவர்ச்சி நடனம் படமாக்கப்பட்டது. 'எவன் கெட்டுப் போனால் என்ன? அட எனக்கொரு மொந்தை ஊத்து' என்ற பாடலுக்கு சிலுக்கு சுமிதா கவர்ச்சி காட்டி போதை நடனமாடினார்.

இப்படத்தில் ரவீந்தர், சத்யகலா, தேங்காய் சீனிவாசன், வி.கே.ராமசாமி, எம்.என்.ராகவன், மனோரமா, காந்திமதி மற்றும் பலர் நடிக்கின்றனர். கதை வசனம் எழுதி இயக்கும் பொறுப்பை கலைமணி ஏற்றுள்ளார்.

## ஒரு தாயின் இதயம்

திலோக சினிமாஸ் அண்ட் கம்பெனியாரின் முதல் தயாரிப்பு 'ஒரு தாயின் இதயம்'. இதன் துவக்க விழா புலவர் சிதம்பரநாதன் பாடல்பதிவுடன் நடைபெற்றது.

இப்படத்தில் ராஜேஷ், வடிவுக்கரசி சுபத்ரா, வி. எஸ். ராகவன், அம்ஜத்குமார், சச்சு, எஸ். என். லட்சுமி மற்றும் பலர் நடிக்கின்றனர். இப்படத்திற்கான படப்பிடிப்பு வேலைகள் சேலத்தில் நடைபெற உள்ளன. நாவலாசிரியர் ரா. தமிழ் செல்வன் இப்படத்தின் மூலம் இயக்குனராகிறார்.

*

## கமலுக்கு பின் விமல்

ஏவி. எம். நிறுவனம் அறிமுகப்படுத்தியவர் தான் நடிகர் கமல். இன்று திரையுலகில் கொடிகட்டி பறக்கிறார். கமலைத் தொடர்ந்து ஏவி. எம் நிறுவனத்தார் தங்களின் "அம்மா" படத்தில் விமல் என்ற சிறுவனை அறிமுகப்படுத்துகிறார்கள். அம்மா படத்தில் அனைவரும் வியக்கும் வண்ணம் விமல் நடித்துள்ளான். சரிதா உட்பட அனைவருமே விமலின் நடிப்பு கண்டு பிரமித்து விட்டனர். கமலைத்தொடர்ந்து அந்த இடத்திற்கு விமல் வரவேண்டும்.

## பாத்ரூமில் பத்திரிகை படிக்கும் பாக்யராஜ்

நடிகர் பாக்யராஜ் பத்திரிகை படிக்கும் இடம் எது தெரியுமா? பாத்ரூம். ஆம் என்ன அதிசயிக்கிறீர்கள். இது பாக்யராஜே ஒரு நிகழ்ச்சியின் போது தெரிவித்ததாகும்.

*

### 'கண்ணோடு கண்'

கே. பி. கொட்டாரக்காரா தயாரிக்கவிருக்கும் படம் "கண்ணோடு கண்". இப்படத்தில் இவருடைய மகன் ரவிக்குமார் கதாநாயகனாக நடிக்கிறார். சுலக்ஷணா கதாநாயகியாக நடிக்கிறார். கல்தூண் படத்திற்கு கதை வசனமெழுதிய கிருஷ்ணா முதன் முறையாக இப் படத்தை இயக்கும் பொறுப்பை ஏற்றுள்ளார்.

*

### ராணித் தேனீ

பரமேஸ்வரி எண்டர் பிரைசாரின்பிரும்மாண்ட தயாரிப்பு ராணித் தேனீ. இப்படத்தில் தீபன் சக்கரவர்த்தி, சிவச்சந்திரன், தேங்காய் சீனிவாசன் சாருஹாசன், வனிதா, ரஜனி மற்றும் பலர் நடிக்கின்றனர்.

திலீப் சொல்லும் தத்துவம்:

## படுக்கைவளர்த்த உறவு ஆஸ்பத்திரி அழிக்கிறது

ராஜேஷ் பணக்கார வாலிபன். கண்ணில்படும் பெண்களை எல்லாம்காம இச்சைக்கு உட்படுத்த எண்ணுபவன். இவனது பார்வை லட்சுமியின்மேல் விழுகிறது. லட்சுமிவேலை தேடிக் கொண்டிருப்பதை அறிகிறான் ராஜேஷ். அவள் வேலையில் சேர தானே டெபாஸிட் கட்டுவதாக வலிய வருகிறான். சோழியன் குடுமி சும்மா வா ஆடும்? ஆனால் லட்சுமி மறுத்து விடுகிறாள்.

நீங்க என்ன தப்பா புரிஞ்சுக்கிட்டீங்க என்று உத்தமன் போல் குழைகிறான். இல்லை சரியாகவே புரிஞ்சுக்கிட்டேன்' என்று சூடாக பதிலளிக்கிறாள் லட்சுமி.

லட்சுமியின் பதிலை கேட்டு அதிக குறும்பாக பதிலளிக்கிறான்ராஜேஷ். லட்சுமியும் பட்டென்று பதிலளிக்கிறாள். லட்சுமியை பெண்பார்க்க வருகிறார்கள். மாப்பிள்ளை வீட்டார் களோ ஒழுக்கம் கெட்ட பெண் எங்களுக்கு வேண்டாமென்கிறார்கள். இது ராஜேஷின் வேலை தான் என்பதை அறிந்த லட்சுமி வெகுண்டெழுந்து ராஜேஷின் மீது சீறுகிறாள்.

"என்னைப்பற்றி என்ன சொன்னே என்று கேட்ட லட்சுமியிடம், படுக்கையில் வளர்ந்த நம்ம உறவு ஆஸ்பத்திரியில் அழிஞ்சுதுன்னேன் என்கிறான் ராஜேஷ். இப்ப இங்க சொன்னேன். இனிமே ஊரைக்கூட்டி சொல்வேன் என்று எக்காளமிடுகிறான்.

இப்படியொரு காட்சி பி. எஸ். பி. பிக்சர்சாரின் மாதுளை முத்துகளுக்காக சேலம் அருகே படமாக்கப்பட்டது. ராஜேஷாக திலீப்பும், லட்சுமியாக மனோசித்ராவும் நடித்தனர். சுரேஷ், கைலாஷ், எஸ். வி. சேகர், ஹாஜா செரீப், விஜயசாந்தி, மனோரமா, கவுண்டமணி, மற்றும் பலர் நடிக்கின்றனர். இசை சங்கர்—கணேஷ். கே. எம். பாலகிருஷ்ணன் இப்படத்தை இயக்குகிறார். ஒளிப்பதிவை ரகுநாதரெட்டி கவனிக்கிறார். சிராஜுதின் கதை வசனமெழுதுகிறார்.

*

## புதுக் கவிதையை தொடர்ந்து புதிய படம்

புதுக்கவிதை படத்தை அடுத்து பாலச்சந்தரின் கவிதாலயம் மாறுபட்ட கதையம்சம் கொண்ட படம் ஒன்றைத் தயாரிக்கின்றனர். இதில் ரஜினிகாந்த் நடிக்கிறார். இப் படத்தை இயக்கும் பொறுப்பை எஸ். பி. முத்துராமன் ஏற்றுள்ளார். மற்ற நடிகர். நடிகையர் தேர்வு விரைவில் நடைபெறும்.

கண்மாய் கரையோரத்தில் மனோசித்ராவிடம் காசு கொடுத்து கற்பை கேட்கும் திலீப் படம்: மாதுளை முத்துக்கள்.

## நினைவெல்லாம் நித்யா

செல்வச் செழிப்பில் வாழ்பவன் சந்துரு. தன் நண்பர்களுடன்ஜாலியாக பொழுது போக்குகிறான். நண்பனின் எஸ்டேட்டுக்கு பொழுது போக்காக சென்ற சந்துரு நித்யா என்ற கிராமப்பெண்ணை

விமர்சனம்

சந்திக்கிறான். இருவரும் காதல் கொள்கின்றனர். தன் ஜாதிக்கட்டுப்பாட்டை மீறி எதுவும் செய்ய முடியாது என்பதை உணர்ந்த நித்யா, சந்துருவிடம் இதைக் கூறுகிறாள்.

இதற்கிடையில் நித்யாவின் காதலை அறிந்த அவளுடைய அண்ணன் அவளை துன்புறுத்துகிறான். துன்பம் தாளாத நித்யா காதலனுடன் (சந்துருவுடன்) ஓடி விடுகிறாள். சந்துருவின் வீட்டிலும் எதிர்ப்பு தெரிவிக்கின்றனர். எதிர்ப்பை மீறி தனியாக நண்பன் திலீப்பின் உதவியுடன் வாழுகின்றனர். இடையிலே சந்துருக்கு ஏற்பட்ட விபத்து, சந்துருவை பிரிந்து நித்யா ஊருக்கு செல்கிறாள்.

நித்யாவை தன் பெற்றோரின் சூழ்ச்சியே பிரித்தது என்பதை உணர்ந்த சந்துரு அவளைக் காண செல்கிறான். இருவரும் சந்திக்கின்றனர். இன்பமயமான சந்திப்பின் போதே எமலோகம் செல்கின்றனர். இதுதான் கதை.

சந்துருவாக வரும் கார்த்திக் நன்றாக ஆட்டமாடுகிறார். சண்டைக் காட்சிகளில் நல்ல விறுவிறுப்பு காட்டுகிறார். அப்பாவித்தனநடிப்பிலும் அப்பாவைத் போல் பளிச்சிடுகிறார். நித்யாவாக வரும் ஜீ. ஜிக்கு இது முதல்படமென்றாலும் அந்த உணர்வே எழாதவாறு நன்கு செய்துள்ளார். கலைக் குடும்பத்தின் பிரதிபலிப்புத் தெரிகிறது.

தோற்றம் தான் கெடுத்து விடுகிறது, திலீப்பின் நடிப்பும் பாராட்டும்படியாகவே உள்ளது. தான்கொடுத்தபணத்தை தன் நண்பன் வாங்க மறுப்பதை அறிந்து உணர்ச்சி பொங்க பேசுவது நன்றாக உள்ளது. அஞ்சனா செய்யும் அட்டகாசங்கள் ரசிக்கும்படி உள்ளது. ரவி, வி. கோபாலகிருஷ்ணன் ஆகியோர் தன்பங்கை சரிவர செய்துள்ளனர்.

இப்படத்தில் குறிப்பிடும்படியாக உள்ளது ஒளிப்பதிவே. என். டி. திவாரி அற்புதமாகப் பண்ணியுள்ளார். இளையராஜாவின் இசை பரவாயில்லை. பாடல்களை வைரமுத்துதான் எழுதியுள்ளாராஎன்பதுசந்தேகமாகவுள்ளது. பாடல்கள் ஏனோதானோஎன்றிருக்கிறது.

கதை, திரைக்கதை வசனம் எழுதி இயக்கும் பொறுப்பை ஸ்ரீதர் கவனித்திருக்கிறார். படத்தின் முற்பகுதியில் நன்கு கவனம் செலுத்தியிருக்கும் ஸ்ரீதர் பிற்பகுதியில் சரிவர கவனம் செலுத்தியிருந்தால் நிச்சயமாக ஒரு வெற்றிப் படைப்பை தந்திருக்க முடியும். பிற்பகுதியில் செலுத்தாத கவனமே ஒருவேளை படத்தின் தோல்விக்குக் காரணமாகக்கூட அமையலாம். சிறிய தவறுகளைக்கூட இப்பொழுதுள்ள ரசிகர்கள் கண்டு விடுகையில் ரசிகர்களை ஏமாற்றும் பெரிய தவறுகளும் இதில் இருக்கின்றன. ரசிகர்களின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு ஸ்ரீதர் இயக்குவாரேயானால் இழந்த இடத்தை மீண்டும் பெறலாம்.

மொத்தத்தில் நினைவில் நிற்கக்கூடியவளாகவே இந்த நித்யா இருக்கிறாள்.

—: பாலுமணி :—

சென்சார்போக்கு:

## இயக்குநர் கோபால - கிருஷ்ணன் வருத்தம்

சோழா கலாலயம் சாரில் நடத்தப்பட்ட பாராட்டு விழாவில் கலந்துகொண்டுஇயக்குநர் கே.எஸ். கோபால கிருஷ்ணன் பேசுகையில் சென்சார் போர்டிலுள்ளோர் நடவடிக்கை குறித்து பெரிதும் வருத்தம் தெரிவித்தார். லட்சக்கணக்கில் பணம் முதலீடு செய்யும் பட அதிபர்களின் நிலையை எண்ணிப் பார்க்க சென்சார் போர்டார் தவறி விட்டதாக குற்றம் சாட்டினார். சினிமா பற்றி தெரிந்தவர்களே சென்சார் போர்டில் இருக்கவேண்டும் என்ற கோரிக்கையையும் எழுப்பினார்.

*

எஸ்பி. பாலசுப்பிரமணியம்

## இசை அமைப்பாளர் ஆகிறார்

கே. ஆர். ஜி. புரொடக்சன்சார் அடுத்து ஒருபிரம்மாண்டமான வண்ணப் படத்தை தயாரிக்க விருக்கின்றனர். இப்படத்திற்கு திரைக்கதை, வசனம் எழுதி இயக்கும் பொறுப்பை ஸ்ரீதர் ஏற்றுள்ளார். இப்படத்தின் மூலம் பிரபல பின்னணிப் பாடகர் எஸ். பி. பால சுப்பிரமணியம் இசை அமைப்பாளராகிறார்.

பஸ் பயணங்களில் நாடகத்தில் பல்லவ சிங்காரம் - ஸ்ரீபாலா